(2) THE MADRAS BEEDI INDUSTRIAL PREMISES (REGULATION OF CONDITIONS OF WORK) BILL, 1958 (L.A. BILL NO. 18 OF 1958).

MR. SPEAKER : We have finished general discussion on the Bill. We shall now consider it clause by clause.

*Clause* 2

MR. SPEAKER : There are many amendments to this clause. Hon. Members may move them one by one.

THE HON. SRI R. VENKATARAMAN : If you will permit the Government to move their amendment, other amendments may not be necessary.

MR. SPEAKER : All right.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"In sub-clause (*g*) of clause 2, *for* the words, brackets and figures ' and where the affairs of any beedi industrial premises are entrusted to any other person (whether called a managing agent, manager, superintendent, or by any other name) such other person shall be deemed to be the employer, and includes a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi ', *substitute* the following :—

' and includes—

(i) a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi; and

(ii) any other person to whom the affairs of any beedi industrial premises are entrusted (whether such other person is called a managing agent, manager, superintendent, or by any other name) '."

MR. SPEAKER : So, other members are not moving their amendments. The clause and the Government amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளக்கூடிய அதே நேரத்தில், நான் கொடுத்திருக்கும் திருத்தத்தைப் பற்றியும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 1947-ம் வருஷத்திய பாக்டரி சட்டத்தில் எப்படி கண்டிருக்கிறதோ அதே போன்று இதிலும் கண்டிருக்கவேண்டும். முதலாளிகளாக இருந்தாலும் சரி, மானேஜர்களாக இருந்தாலும் சரி, அல்லது வேறு யார் மூலமாக உற்பத்தி செய்யக்கூடியவர்களாக இருந்தாலும் சரி, அவர்களையெல்லாம் கட்டுப்படுத்தக்கூடிய அளவுக்கு இருக்க வேண்டும். இந்த மசோதாவில், கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தையும் சேர்த்துப் பார்த்தால், எந்த அளவுக்கு கட்டுப்படுத்த முடியுமோ அந்த அளவுக்குக் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது, என்று சொன்னாலுங்கூட

அதே நேரத்தில் இன்றைக்கு நடைமுறையில் நான் பார்த்த வரையில் பலவிதத்தில் சூழ்ச்சிகள் செய்யப்பட்டு வரக்கூடிய நிலைமை இருக்கிறது. அதன் காரணத்தால்தான் ட்ரேட் மார்க் யாருக்கு இருக்கிறதோ அவருக்குத்தான் லைசென்ஸ் கொடுக்கவேண்டுமென்று என்னுடைய திருத்தத்திலே கூறியிருக்கிறேன்.

மத்திய சர்க்கார் சட்டத்தின்படி யாருக்கு வேண்டுமானாலும் லைசென்ஸ் கொடுக்கலாம் என்கிற விதி இருக்கிற காரணத்தினால் இப்பொழுது அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் திருத்தம் நான் ஒப்புக்கொள்ளும் அளவுக்கு இருந்தபோதிலும், நான் ஒரு யோசனைகூற விரும்புகிறேன். ட்ரேட் மார்க் யாருக்கு இருக்கிறதோ அவருக்குத்தான் லைசென்ஸ் கொடுக்க வேண்டுமென்று மத்திய சர்க்காரையும் வற்புறுத்தி, அவர்களுடைய சட்டத்திலேயும், யாருக்கு வேண்டுமானாலும் லைசென்ஸ் கொடுக்கலாம் என்று இருக்கிற விதியை திருத்தும்படி நமது சர்க்கார் வலியுறுத்தி கேட்டுக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்வது மற்ற ராஜ்யங்களுக்கும் சரி, நம்முடைய ராஜ்யத்திற்கும் சரி உதவிகரமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அது மாத்திரம் அல்ல. இந்த சட்டத்தை நாம் நிறைவேற்றக்கூடிய இதே நேரத்தில் இதற்கு நேர்விரோதமாக பல முயற்சிகள் எடுத்துக் கொள்ளக்கூடிய நிலைமையும் ஏற்படும். அப்போது நமது சர்க்கார் அதில் தீவிர கவனம் செலுத்தவேண்டிய நிலைமை இருக்கிறதென்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு, கனம் அமைச்சர் அவர்கள் அதில் தீவிர கவனம் செலுத்துவார்கள் என்ற நம்பிக்கையோடு, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்.

**Sri K. SATTANATHA KARAYALAR**: கனம் சபா நாயகர் அவர்களே, மந்திரி அவர்கள் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை நான் முழுமனதுடன் வரவேற்கிறேன். ஆனால், சில கோர்ட்டுத் தீர்ப்புகள் எதிராகப் போய்விடுமோ என்ற அச்சம் இன்னும் உளது. இங்கு நாம் சபையில் நம் கருத்துக்களைத் தெரிவிப்போமானால், நாளை கோர்ட் முன் வழக்கு வரும்போது இந்தச் சபையின் கருத்து என்ன என்பதாவது அவர்கள் கண்ணிலே படும் என்று நினைக்கிறேன்.

சமீபத்திலே இதேபோல பீடித் தொழில் சம்பந்தமாக, மத்தியப் பிரதேசத்திலிருந்து இடைத்தரகர் என்று நாம் சொல்கிறோமே, அதுபோன்ற சத்திதார், அதாவது ஏஜெண்ட் போன்றவர்கள், நடத்திய தொழிலுக்கு இதுபோன்ற சட்டம் செல்லுமா, அவர்கள் கீழ் இருப்பவர்களும் தொழிலாளி என்று கொள்ளப்படுமா என்பதுபற்றி சுப்ரீம் கோர்ட் புல் பெஞ்சு தீர்ப்பு அளித்திருக்கிறது.

**"The concept of employment involves three ingredients, (1) employer, (2) employee and (3) the contract of employment."** என்று கூறப்பட்டிருக்கிறது.

தொழிலாளி என்றால் யார் என்பதற்கு விரிவுரை கூறும் வகையில், **"The worker under the definition of the Act is a person who enters into a contract of service under the management and does not include an independent contractor"** என்று சொல்லி, சத்திதாரை கண்டிராக்டர் என்று சொல்லியிருக்கிறது. 'காண்டிராக்ட் ஆப் சர்வீஸ்' என்று இருக்கிறதே தவிர, 'காண்டிராக்ட் பார் சர்வீஸ்' என்று இல்லை. இதுபோன்ற சத்திதார்களையெல்லாம் நாம் ஏஜெண்ட் அல்லது பிராஞ்ச் மானேஜர் என்று சொல்கிறோம். இந்தத் திருத்தத்திலே நாம் பிராஞ்சு மானேஜர்களை உட்படுத்தி, ட்ரேட் மார்க் வைத்து நடத்துவோர்களையும் மானேஜர்களையும் இதற்குப் பொறுப்பாக இருக்க வேண்டுமென்று கொண்டு வந்துள்ளோம். மானேஜராக இருப்பவருக்குத்தான் தொழிலாளர்களோடு நேரடியான தொடர்பு இருக்கும். ட்ரேட் மார்க் வைத்து நடத்துபவர்

களுக்கு தொழிலாளிகளோடு நேரடியான தொடர்பு இருக்காது. மாஸ்டர்–ஸர்வெண்ட் உறவு அவர்களுக்குப் பொருந்தாது. அதேபோல் சத்திதார் மூலமாக வேலை செய்யக்கூடியவர்களையும் உட்படுத்த முடியாது என்று தீர்ப்பு வந்துவிடுமோ என்று நான் ஐயப்படுகிறேன்.

அடுத்தப்படியாக டெபனிஷன் ஷரத்திலே 'occupier' என்பதைப்பற்றி ஒரு விளக்கமும் கொடுக்கப்பட வில்லை. 7–வது ஷரத்திலே 'occupier' என்ற பதம் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் "**The occupier of a factory means a person who has ultimate control of all the affairs of the factory**" என்று இருந்தால் இன்னும் நன்மையாக இருக்கும் என்று நினைக்கிறேன். ஆகையால் டெபனிஷன் ஷரத்திலே 'occupier' என்பதற்கு விளக்கம் கொடுக்கப்படவேண்டாமா, அதையும் define செய்ய வேண்டாமா என்று யோசிக்கவேண்டும். அதையும் மந்திரி அவர்கள் உட்படுத்திக்கொள்வார்கள் என்று நான் நினைக்கிறேன்.

SRI M. P. SARATHI : சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை ஏற்று என்னுடைய திருத்தத்தை நான் பிரேரேபிக்கவில்லை. என்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொண்டால் மத்திய சர்க்கார் விதித்துள்ள சட்டத்திற்கு புறம்பாக போய் விடும் என்ற ஒரு காரணத்திற்காக என்னுடைய திருத்தத்தை பிரேரேபிக்கவில்லை என்றாலும், முக்கியமாக இதிலிருந்து முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் எந்த முறையில் தொடர்பு இருக்குமென்று கவனிப்போமானால் பழைய நிலவரப்படிதான் இருக்கும். எதை குறிப்பிட்டு நான் சொல்கிறேன் என்றால், அண்மையில் ஏற்பட்ட தொழில் தகராறில் தொழிலாளி என்பவர் யார் என்பது பற்றிய ஹைகோர்ட் தீர்ப்பு முதலாளிகளைப் பாதிக்காது என்று பார்த்தோம். அதன்படிதான் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த திருத்தத்தில் ப்ராஞ்சு மானேஜர்களும் முதலாளிகள் தான் என்ற தோரணையில் இருக்கிறது. இருந்தபோதிலும் இப்பொழுது இந்த சட்டம் அவசியம்தானா என்று தோன்றுகிறது. காரணம், முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இப்பொழுதும் சம்பந்தம் இல்லை என்ற ஒரு முடிவுதான் இருக்கிறது. ஆகையால், இதைத் திருத்துவதற்கு என்ன வழி இருக்கிறது என்று அமைச்சர் யோசித்துச் செய்தால் எவ்வளவோ நன்றாக இந்தச் சட்டம் அமையும் என்று நான் நினைக்கிறேன்.

முக்கியமாக இப்பொழுது இந்த அமைச்சர் கொண்டுவந்துள்ள திருத்தத்தின்படி தகுதியில்லாதவர்கள் எல்லாம் பிராஞ்சு முதலாளிகளாகவும், ஏஜென்டுகளாகவும் லைசென்ஸ் பெற்று, ஏதோ அவர்கள் குற்றம் செய்யும் போது தப்பித்துக்கொள்வதற்கு ஏதுவாகும். லைசென்ஸ் வாங்குவதற்குத் தகுதியுள்ளவர்களுக்குத்தான் லைசென்ஸ் கொடுக்கவேண்டும், ஜவாப் சொல்லக்கூடிய நிலைமையில் உள்ளவர்களுக்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டுமென்ற நியதியையாவது இந்தச் சட்டத்தில் புகுத்தினால் நன்றாக இருக்கும் என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN: கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இருக்கும் சட்டப்படி நடத்தரத்தில் இருக்கும் ப்ராஞ்ச் மானேஜர்களுக்கும், சாதாரண ஊழியர்களுக்கும் தான் தொடர்பு உண்டு. ஏதோ புகையிலை கொடுக்கின்றவர்களுக்கும், பணம் கொடுக்கின்றவர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே நேரடியான தொடர்பு இல்லை என்ற சட்டத்தை மாற்றுவதற்காகத்தான் இந்தத் திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்தத் திருத்தத்தின் மூலமாக அவர்களுக்குள் நேரடியான தொடர்பு ஏற்படுகின்றது. அந்த முறையில்தான், ஒரு ட்ரேட் மார்க்கினுடைய அதிபராக இருந்தாலும், அல்லது யாருக்கு இந்தத் தொழிலிலே இறுதியான பொறுப்பு, அல்டிமேட் கண்ட்ரோல் இருக்கிறதோ அவரும், இன்னும் யார் ப்ராஞ்ச் மானேஜர் என்ற பொறுப்பிலே வேலை வாங்குகிறாரோ அவரும் சேர்ந்து, முதலாளி என்று

கருதப்படுவார் என்ற ஷரத்து இங்கு சேர்க்கப்பட்டிருக்கிறது. இது எவ்வளவுதூரம் தொழிலாளர்களுக்கு உதவியாக இருக்கும் என்பதைப் பற்றிச் சில சந்தேகங்கள் கிளப்பப்பட்டன. சர்க்காரைப் பொறுத்த அளவில் இந்தத் திருத்தம் தொழிலாளர்களை பாதுகாக்கும் என்ற நம்பிக்கையுடன் இதைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதிலும் முக்கியமாக நான்காம் கிளாசில் கொண்டு வருகிற வேறு திருத்தங்களையும் சேர்த்து இதில் படித்தால் யாருக்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டுமென்று நிர்ணயம் செய்கிறபோதே வேறு யார் பினாமியாக அப்ளிகேஷன் போட்டிருக்கிறார் என்பதையும் பார்த்து லைசென்சு கொடுக்கிறவர்கள் லைசென்சு வழங்கவேண்டுமென்று கண்டிருக்கிறது. இன்னும் வெறும் பதர்களை—மென் ஆப் ஸ்ட்ரா—வைத்துக்கொண்டு சட்டத்திலுள்ள சலுகைகளை பெறுவதும், சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ளலாம் என்று எல்லாக் காரியங்களையும் செய்தாலும் அதற்கெல்லாம் வழியில்லாமல் பல காரியங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகவே இதை ஆதரிக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ** : சர், ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். எதிர்க்கட்சித் தலைவர் ஒருவர்கூடச் சபையில் இல்லை என்பதை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

**Mr. SPEAKER** : எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள்தான் இத்தனை பேர்கள் இருக்கிறார்களே. Now I will put the Government amendment to the vote of the House. The question is :

"In sub-clause (*g*) of clause 2, *for* the words, brackets and figures 'and where the affairs of any beedi industrial premises are entrusted to any other person (whether called a managing agent, manager, superintendent, or by any other name) such other person shall be deemed to be the employer, and includes a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi,, *substitute* the following :—

'and includes—

(i) a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi; and

(ii) any other person to whom the affairs of any beedi industrial premises are entrusted (whether such other person is called a managing agent, manager, superintendent, or by any other name)'."

The amendment was put and carried.

Clause 2 as amended was put and carried

Clause 3 was put and carried.

*Clause 4.*

**Mr. SPEAKER** : The motion is—

'That clause 4 do stand part of the Bill'.

13th September 1958]

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move—

" In clause 4—

(*a*) in sub-clause (3), reletter items (*c*), (*d*) and (*e*) as items (*f*), (*g*) and (*h*) respectively and before item (*f*) as so relettered, *insert* the following items :—

' (*c*) the financial resources of the applicant including his financial capacity to meet the demands arising out of the provisions of the laws for the time being in force relating to welfare of labour;

(*d*) whether the application is made *bona fide* on behalf of the applicant himself or *benami* on behalf of any other person;

(*e*) whether the beedi manufactured by the applicant will be sold and marketed by himself or through a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi or any other person ';

(*b*) *re-number* sub-clauses (4), (5) ,(6) and (7) as sub-clauses (5) ,(6), (7) and (8) respectively and before sub-clause (5) as so re-nuumbered, *insert* the following sub-clause :—

' (4) (*a*) A licence granted under this section shall be valid for a financial year and shall be renewed from financial year to financial year.

(*b*) The competent authority shall, in deciding whether to renew a licence or to refuse a renewal thereof, have regard to the matters specified in sub-section (3) ';

(*c*) in sub-clause (5) as so re-numbered, for the words ' The competent authority shall not grant a licence ', *substitute* the words ' The competent authority shall not grant or renew a license ';

(*d*) in sub-clause (6) as so re-numbered, for the words ' any licence granted under this Act ', *substitute* the words ' any licence granted or renewed under this Act ' and *for* the words ' that the licensee has contravened ', substitute the words ' that such licence has been obtained by misrepresentation or fraud or that the licensee has contravened ';

(*e*) in sub-clause (8) as so re-numbered, *for* the word ' grant ' in both the places where it occurs, *substitute* the words ' grant or renew '."

Now I will explain the object of the amendment, Sir.

இப்போது இருக்கிற சட்டத்தின்படி யாராவது ஒருவர் அப்ளிகேஷன் போட்டு, பீடி இண்டஸ்ட்ரியல் ப்ரிமிஸஸ் நடத்த வேண்டுமென்று சொன்னால் அவர்களுக்கு என்ன என்ன தகுதிகள் இருக்க வேண்டுமென்பதை க்ளாஸ் 3-ல் விவரித்திருக்கிறோம். இடம் போதுமானதாக இருக்கிறதா? அல்லது அப்ளிகேஷன் செய்கிறவர் உண்மையான பொருத்தமானவர் தானா என்பதைக் கண்டறிய வேண்டும் என்று இருக்கிறது. அத்துடன் இன்னும் சில விதிகளைச் சேர்க்கவேண்டுமென்று

கருதுகிறோம். அதாவது எந்தவிதமான லைசென்சு வேண்டும் என்று கேட்கிறாரோ, அதற்குப் போதுமான பொருள் தகுதி இருக்கிறதா ? சர்க்காருடைய சட்டப்படி நடத்துவதற்குச் சக்தி இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். உண்மையான முதலாளியா, பினாமியா என்பதை விசாரணை செய்வதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறது. மேலும் உற்பத்தி செய்யப்பட்ட பீடியானது ஏகபோக உரிமையாக வைத்துக்கொண்டு விற்கப்படுகிறதா? ஏஜெண்டு மூலம் கொடுக்கப்படுகிறதா ? இவையெல்லாம் சரியாக இருந்தால் சர்க்கார் லைசென்சு கொடுப்பார்கள். இரண்டாவது திருத்தத்தை விளக்குகிறேன். பீடித் தொழில் நடத்துபவர்கள் லைசென்ஸ் வாங்கவேண்டுமென்றுதான் மசோதாவில் நிபந்தனை விதிக்கப்பட்டிருந்தது. வருஷா வருஷம் முதலாளிகள் லைசென்ஸைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுமென்ற விதியை இப்போது மசோதாவில் சேர்த்திருக்கிறோம். அது இரண்டாவது திருத்தம். இந்த விதி இல்லா விட்டால், முதலாளிகள் தாங்கள் லைசென்ஸ் வாங்கும்போது இந்த நிபந்தனைகளுக்கு உட்பட்ட நிலையில் இருந்து விட்டு, லைசென்ஸ் வாங்கிய பிறகு நிபந்தனைகளுக்கு முரண்பட்ட நிலையில் இருப்பார்களானால் அப்போது அவர்கள் மீது ஒரு நடவடிக்கையும் எடுக்க முடியாது போய்விடும். ஆகவேதான் இந்த விதியைச் சேர்த்திருக்கிறோம். அவர்கள் வருஷா வருஷம் மறுபடி லைசென்ஸ் கோரும்போது, சட்டத்திலுள்ள எல்லா விதிகளையும் அவர்கள் அனுஷ்டிக்கிறார்களா என்று பார்த்து, அனுஷ்டிக்காமல் இருந்தால் லைசென்ஸ் மறுக்கலாம். ஆகவே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : கனம் மந்திரி அவர்களுடைய பதிலைக்கேட்ட பிறகு, ஸ்ரீ கோதண்டராமன் 4-வது பிரிவிற்கு கொடுத்திருக்கும் திருத்தங்களை பிரேரேபிக்கப்போகிறாரா, இல்லையா?

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 4—வது பிரிவிற்கு கனம் அமைச்சர் கொடுத்திருக்கும் திருத்தங்கள் வரவேற்கத்தக்கவை ; ஆனால், 15-க்கு மேற்பட்ட பெண் தொழிலாளர்கள் வேலை செய்யும் இடங்களில் அவர்களுடைய குழந்தைகளின் பாதுகாப்பிற்காக creches முதலிய வசதிகளைக் கொடுக்கவேண்டுமென்றும் . . .

MR. SPEAKER : The hon. Member is speaking about creche which is mentioned in clause 14. 4-வது பிரிவு பற்றி நீங்கள் பேசுங்கள். 4-வது பிரிவிற்கு நீங்கள் கொடுத்திருக்கும் திருத்தங்களை பிரேரேபிக்கிறீர்களா, இல்லையா ?

SRI V. K. KOTHANDARAMAN : கோஷாப் பெண்கள் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆகவே பெண் தொழிலாளர்களுக்கு தனி தொழிற்கட்டிடங்கள் அமைக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் என் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இப்போது திருநெல்வேலி போன்ற ஜில்லாக்களில் ஏராளமான முஸ்லீம் பெண்கள் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். பெண் தொழிலாளர்களுக்கு தனி தொழில் கட்டிடங்கள் கட்டப்படாவிட்டால் லைஸென்ஸ் மறுக்கப்படுவதற்கு என் திருத்தம் வகை செய்கிறது. ஆகவே என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : 4-வது பிரிவிற்கு நீங்கள் கொடுத்திருக்கும் திருத்தங்களை பிரேரேபிக்கிறீர்களா இல்லையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, if the amendment moved by me is accepted, then his amendments cannot fit in with my amendment.

MR. SPEAKER : If the Government amendment is carried, then I will rule the other amendments out of order.

13th September 1958]

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I am not moving my amendments.

* SRI D. S. AUTHIMOOLAM : கனம் சபாநாயகர் அவர்களே, 4-வது பிரிவிற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சர்க்கார் திருத்தங்களை யெல்லாம் நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் sub-clause (c)-ல் ' **The financial resources of the applicant including his financial capacity to meet the demands arising out of the provisions of the laws . .**" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த உப பிரிவை நீக்கிவிட வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், இந்த விதி பல முதலாளிகளை மிகவும் பாதிக்கும். எனக்குத் தெரிந்து எத்தனையோ வருஷங்களாக நடந்துவந்த ஒரு பீடிக் கம்பெனி மிகவும் நஷ்டப்பட்டிருந்தது. பிறகு அது ஒரு " டிரஸ்டு "க்கு போய் மறுபடி முன்னுக்கு வந்தது. இந்த விதி இருந்தால், கஷ்டநஷ்டமான நிலையிலிருக்கும் கம்பெனிகளுக்கு லைஸென்ஸ் கிடைக்காமல் போய்விடும். அவைகள் முன்னுக்கு வர முடியாது. அப்படியே நசித்துப்போய்விடும். இந்த ஸப்-க்ளாஸ் இருந்தால் பலருக்கு வெகு சுலபமாக லைஸென்ஸ் மறுக்கப்படக் கூடும். இது பீடித் தொழிலில் ஈடுபட்டுள்ள பலரை மிகவும் பாதிக்கும். ஆகவே இந்த ஸப்-க்ளாஸை நீக்கிவிட வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தங்களை நான் வரவேற்கிறேன். ஆனால் இவைகளால் நடைமுறையில் ஏற்படக்கூடிய சில சிக்கல்களை மாத்திரம் இந்த சபையில் தெரிவிக்க விரும்புகிறேன். ஸ்ரீ ஆதிமூலம் அவர்கள் குறிப்பிட்டதுபோன்ற கஷ்டங்கள் ஏற்படக்கூடும். " பைனான்ஷியல் ரிஸோர்ஸஸ் " என்றால் அது எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்று மசோதாவில் குறிப்பிடப்படவில்லை. லைஸென்ஸ் கோருபவர் இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கான சம்பளப் பணத்தை முன்தொகையாகக் கட்ட வேண்டுமா? அல்லது, லைஸென்ஸ் கோருபவருக்கு சொத்து இருக்க வேண்டுமா ? அல்லது, சொத்துள்ளவர்கள் ஜாமீன் கொடுக்க வேண்டுமா ? அவர்களுடைய பொருளாதார சக்தி எந்த முறையில் இருக்க வேண்டும். சட்டமியற்றிய பிறகு விதிகளை (ரூல்ஸை) பிரசுரிக்கும்போது அதைப்பற்றி திட்டவட்டமாகக் குறிப்பிட வேண்டும்.

பீடித் தொழிலை சிறிய தொழிலாக, குடும்ப அளவில், டிரேட் மார்க்கு இல்லாமல் சிலர் நடத்துகிறார்கள். ஷர்பத் கடைகள் போன்ற சிறிய கடைகளில் கூட பீடி சுற்றுகிறார்கள். கன்னியாகுமரி மாவட்டத்தில் இதற்கு முன் இம்மாதிரி செய்துவந்திருக்கிறார்கள். பாக்டரி சட்டப்படி 20–25 பேர்கள் வீட்டிலேயே இருந்துகொண்டு பீடி சுற்றுவதற்கு என்று கோரினால் லைஸென்ஸ் கொடுக்கப்படுமா ? அப்படி அதற்கு லைஸென்ஸ் கொடுப்பதானது அந்த லைஸென்ஸ் துர்வினியோகம் செய்யப்படுவதற்கு இடம் கொடுக்காதா ? இவைகளையும் கனம் அமைச்சர் பரிசீலனை செய்ய வேண்டும். ஆனால், அவ்வாறு தொழில் நடத்துபவர்களுக்கு லைஸென்ஸ் கொடுக்காவிட்டால், ஒருவேளை சிறிய அளவில் தொழில் நடத்துபவர்கள் பாதிக்கப்படுவார்கள். அதற்கு லைஸென்ஸ் கொடுப்பதானால் " நான் ட்ரேட் மார்க்கே இல்லாமல் தொழில் நடத்துகிறேன். பீடி சுற்றி அவ்வப்போது அந்த அந்த வியாபாரிகளுக்குக் கொடுக்கிறேன் " என்று கூறி லைஸென்ஸ் கோரினால் அவ்வாறு லைஸென்ஸ் கோருபவர்களுக்கு லைஸென்ஸ் கொடுக்கலாமா ? ஆனால், அவர்களுக்கு லைஸென்ஸ் கொடுப்பதானது, சிலர் முதலாளிகளின் கையாட்களாக இருந்து முதலாளியின் பணத்தை வாங்கிக்கொள்வதற்கு இடம் கொடுக்காதா ?

SRI M. P. SARATHI : கனம் சபாநாயகர் அவர்களே, மசோதாவின் 4-வது பிரிவில் மத்திய சர்க்காரின் L-2, L-4 லைஸென்ஸுகள் நம் சர்க்காரின் லைஸென்ஸுகளைப் பெற்றவர்களுக்குத் தான் கொடுக்கப்பட வேண்டும் என்று நிபந்தனை விதித்தால் நன்றாக இருக்கும் என்று கூற

விரும்புகிறேன். அவ்வாறு நிபந்தனை விதிக்கப்பட்டால், நம் சர்க்காரின் லைஸென்ஸை வாங்காவிட்டாலும், மத்திய சர்க்காரின் லைஸென்ஸை வாங்கி இந்தத் தொழிலை நடத்த முடியும். ஆகவே அத்தகைய நிபந்தனையை விதித்தால் நன்றாக இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் தரப்பிலிருந்து திருத்தம் கொடுக்கப்பட்ட பிறகு நாங்கள் எந்தத் திருத்தமும் கொடுப்பதற்கு வழி இல்லை. இருந்தாலும், லைஸென்ஸ் கொடுக்கும் முறையில் ஒரு திருத்தம் செய்யவேண்டியது மிகவும் அவசியம். அப்படி இல்லாவிட்டால், நாம் இயற்றும் சட்டம் ஹோட்டல் சட்டம் மாதிரி ஆகிவிடக் கூடும் என்று நினைக்கிறேன். இது ஹோட்டல் சட்டம் மாதிரி ஆகிவிடக் கூடாது என்பது தான் என் விருப்பம். ஹோட்டல் சட்டம் இங்கே சட்டமாக்கப்பட்டு 6–7 மாதங்கள் ஆகியிருந்தாலும் அது பிரயோஜனமில்லாமல் போய்விட்டது. நேற்று, கனம் மந்திரி அவர்கள் "நீங்கள் குறிப்பிடும் நிபந்தனைகளையெல்லாம் போட்டால் பீடி முதலாளிகள் தொழில் நடத்தமுடியாது" என்று சொன்னார்கள். இருந்தாலும், லீவ், குறைந்தபட்சக் கூலி, விடுமுறை நாட்கள் முதலிய சலுகைகளையெல்லாம் கொடுக்கவிட்டாலும், குறைந்தபட்சமாக, 'வெண்டிலேஷன்' போன்ற சலுகைகளையாவது கொடுப்பவர்களுக்கே லைஸென்ஸ் உண்டு என்று திருத்தினால் தான் நல்லது என்று நினைக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதிமூலம் குறிப்பிட்ட விஷயம் உண்மையில் சிலருக்கு பயத்தை கொடுக்கக் கூடியது தான். அது ஒரு நிபந்தனை அல்ல என்பது, 4-வது பிரிவை நன்றாகப் படித்தால் தெரியும். 'The competent authority shall, in deciding whether to grant or refuse a licence, have regard to the following matters . . .' என்று தான் அந்தப்பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது. லைஸென்ஸ் கொடுப்பவர் 'அவைகள் இருக்கின்றனவா?', 'அப்படி இருக்கிறதா'?, என்று கவனிக்க வேண்டும் என்று தான் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, 'அவ்வாறு இருந்தால் தான் லைஸென்ஸ் கொடுக்க வேண்டும்' என்று சொல்லப்படவில்லை. சில முதலாளிகள் பொருளாதார வசதி இல்லாதவரை பெரிய பிராஞ்சு மானேஜராக வைத்து விடுவார்கள்; பிரச்னைகள் எழுகிறபோது பிராஞ்சு மானேஜரைப் பொறுப்பாளியாக ஆக்கிவிடுவார்கள்; ஆனால் லாபம் வரும்போது லாபத்தை தாங்கள் எடுத்துக்கொள்வார்கள். ஆகவே தான் ஓரளவு பொருளாதார சக்தி உள்ளவர்களுக்கே லைஸென்ஸ் கொடுக்கப்பட வேண்டுமென்பதற்காக இந்த விதியைப் போட்டிருக்கிறோம். இந்த விதி இருந்தால், நன்றாகத் தொழில் நடத்துபவர்கள் கஷ்ட நஷ்ட நிலையை அடையும்போது, அவர்களுக்கு லைஸென்ஸ் மறுக்கப்படக் கூடும் என்று ஸ்ரீ ஆதிமூலம் கூறியதைப் போல் இந்த விதியை 'இண்டெர்ப்ரெட்' பண்ணுவது சரியல்ல.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ சட்டநாத கரையாளர், நடைமுறையில் எழக் கூடிய சில சிக்கல்களைப் பற்றிக் குறிப்பிட்டார். என்னென்ன சிக்கல்களெல்லாம் எழும் என்று பார்த்து எந்தச் சிக்கலும் எழமுடியாதபடி அவ்வளவு திறமையாகச் சட்டமியற்றுவது சாத்தியமல்ல. அவர் குறிப்பிட்ட அம்சத்தைப் பொறுத்தவரையில், 'ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்' செய்துகொள்பவர்கள் அதைத் தெளிவுபடுத்தி விடுவதற்கு வகைசெய்திருக்கிறோம்.

அதாவது, நாம் இப்பொழுது லைஸென்ஸ் கொடுக்கிறபோது அவரிடம் கேட்போம், நீங்கள் உங்களுக்காக சுற்றுகிறீர்களா அல்லது வேறு யாருக்காவது விற்க சுற்றுகிறீர்களா என்று. வேறு யாராவது என்று இருந்தால் அவர்கள் 'டிரேட் மார்க் ஓனரா' என்று கேட்டு விவரம் வாங்கி வைத்துக் கொள்வோம். தகராறு ஏதாவது ஏற்பட்டால், யார் முதலாளி என்று கண்டு பிடிக்க வேண்டிய நிலை ஏற்பட்டால் உடனே அவரவர்களை

13th September 1958] [Sri R. Venkataraman]

இதில் சேர்க்க வேண்டுமென்று இந்த விவரங்கள் கேட்டிருக்கிறோம். பொய்யான விவரங்கள் கொடுக்கலாம் என்று கரையாளர் அவர்கள் சொன்னார்கள். அது அவ்வளவு சுலபமல்ல. பெரிய பீடித் தொழிலை நடத்துகிறவர்கள் இன்கம்-டாக்ஸ் கொடுக்க வேண்டியிருக்கிறது. எங்கிருந்து பீடி சுற்றி வாங்கினீர்கள் என்று இன்கம்-டாக்ஸ் அதிகாரிகள் கேட்பார்கள். யாரிடம் வாங்கினோம் என்று அவர்கள் சொல்ல வேண்டும். அப்படி யாரிடமிருந்து வாங்கினோம் என்று அவர்கள் சொல்கிறார்களோ அவர்கள் லைசென்ஸ் வைத்திருக்கிறார்களா என்று பார்ப்போம். அப்படி அவர்கள் பெயர் கொடுக்காவிட்டால் அவர்கள்தான் கஷ்டத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும். ஆகவே, இதை நன்கு பரிசீலனை செய்துதான் இந்தத் திருத்தங்களைக் கொண்டு வந்திருக்கிறோம். வீட்டிலேயே வைத்துக் கொண்டு செய்ய முடியுமா என்ற பிரச்னை எழுந்தது. இந்த சட்டம் வந்த பிறகு வீட்டில் வைத்துக் கொண்டு இதைச் செய்ய முடியாது. இதனால் சில கஷ்டங்கள் இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியும். ஆனால் அதற்காக சட்டத்தைத் தளர்த்தி விட்டால் இந்த சட்டமே உடைந்து போகும். எல்லோருமே, வீட்டில் வைத்துக் கொண்டு செய்கிறோம் என்று சொல்லி பழைய முறைக்கே திரும்பி விடுவார்கள். ஆகவே இதை பாக்டரி முறையில்தான் நடத்த வேண்டும், அதாவது, 'லைசென்ஸ்ட் ப்ரிமிஸஸ்'ஸில்தான் நடத்த வேண்டும். சாரதி அவர்கள் சொன்னார்கள், எல். 2 லைசென்ஸ் வாங்கி சுற்றி விடுவார்கள் என்று. எல். 2 அல்ல, எந்த 'எல்' லைசென்ஸ் வாங்கினாலும் சரி இனிமேல் பீடி சுற்றுவது 'இன்டஸ்டிரியல் பிரிமிஸஸ்' ஸில்தான் சுற்ற வேண்டும் என்பதுதான் இந்தச் சட்டம். அதற்கு மாறாகச் செய்தால் அவர்களுக்கு தண்டனை கொடுக்கப் படும்.

MR. SPEAKER : I am going to put the Government amendment to the vote of the House. The question is—

"In clause 4—

(*a*) in sub-clause (3), *reletter* items (*c*), (*d*) and (*e*) as items (*f*), (*g*) and (*h*) respectively and before item (*f*) as so relettered, *insert* the following items :—

'(*c*) the financial resources of the applicant including his financial capacity o meet the demands arising out of the provisions of the laws for the time being in force relating to welfare of labour;

(*d*) whether the application is made *bona fide* on behalf of the applicant himself or *benami* on behalf of any other person;

(*e*) whether the beedi manufactured by the applicant will be sold and marketed by himself or through a proprietor or a registered user of a trade mark registered under the Trade Marks Act, 1940 (Central Act V of 1940), in relation to beedi or any other pesron)';

(*b*) *re-number* sub-clauses (4), (5), (6) and (7) as sub-clauses (5), (6), (7) and (8) respectively and before sub-clause (5) as so re-numbered, *insert* the following sub-clause :—

'(4) (*a*) A licence granted under this section shall be valid for a financial year and shall be renewed from financial year to financial year.

(*b*) The competent authority shall, in deciding whether to renew a licence or to refuse a renewal thereof, have regard to the matters specified in sub-section (3). ';

(*c*) in sub-clause (5) as so re-numbered, *for* the words ' The competent authority shall not grant a licence ', *substitute* the words ' The competent authority shall not grant or renew a licence ';

(*d*) in sub-clause (6) as so re-numbered, *for* the words ' any licence granted under this Act ', *substitute* the words ' any licence granted or renewed under this Act ' and *for* the words ' that the licensee has contravened ', *substitute* the words ' that such licence has been obtained by misrepresentation or fraud or that the licensee has contravened ';

(*e*) in sub-clause (8) as so re-numbered, *for* the word ' grant ' in both the places where it occurs, *substitute* the words 'grant or renew '.''

The amendment was put and carried.

Clause 4, as amended, was put and carried.

*Clause 5.*

MR. SPEAKER : The motion is—

' That clause 5 do stand part of the Bill.'

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

' In clause 5, *for* the words " refusing to grant a licence ", *substitute* the words " refusing to grant or renew a licence ".'

MR. SPEAKER : Amendment moved—

' In clause 5, *for* the words " refusing to grant a licence ", *substitute* the words " refusing to grant or renew a licence ".'

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது Licence-ஐ புதுபிக்க ஒரு ஷரத்து மேலும் சேர்க்கப்பட்டிருப்பதால் அதற்கு அப்பீலும், கொடுப்பதற்கு மறுத்தாலும் அல்லது புதுப்பிக்க மறுத்தாலும் அப்பீல் இருக்கவேண்டுமென்றுதான் இது சேர்க்கப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : The question is—

' In clause 5, *for* the words " refusing to grant a licence ", *substitute* the words " refusing to grant or renew a licence ".'

The amendment was put and carried.

Clause 5, as amended, was put and carried.

Clause 6 was put and carried.

13th September 1958]

*Clause 7.*

MR. SPEAKER : The motion is—

'That clause 7 do stand part of the Bill.'

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

'In sub-clause (1) (*a*), *add* the following provids, namely :—

"Provided that such examination or such inquiry shall be conducted in the presence of the representative of the Trade Union of the employees concerned";'

'In sub-clause (1) (*c*), *add* the following at the end :—

"or on a complaint received from the Trade Union representing the employees concerned or from the employees concerned to such effect;".

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I second the amendments.

MR. SPEAKER : Now both the clause and the amendments are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தத் திருத்தத்தை நான் கொண்டு வருவதற்குள்ள காரணம், அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். இன்றையதினம் தொழிற்சாலைகளில் வேலை செய்யக்கூடிய தொழிலாளர் களின்மேல் உள்ள முதலாளிகளின் அடக்குமுறை காரணமாகவோ அல்லது வேறு எந்தக் காரணமாகவோ, தெரிந்தோ தெரியாமலோ ஏற்படக்கூடிய ஒரு சிறிய தவறை ஒரு காரணமாக வைத்துக் கொண்டு அல்லது அவர்கள் ஒன்றுபட்டு அவர்களின் கோரிக்கைகளை பெறுவதற்காக வேண்டி இயங்கக்கூடிய நேரத்தில் அவர்களுக்கு வேண்டாதவர்களை பழிவாங்கி அவர்களைத் தொலைத்துக் கட்டவேண்டுமென்று அவர்களாகவே விசாரணை நடத்தி அந்தத் தொழிலாளர்களை பழி வாங்கும் அளவிற்கு பலவும் நடந்து வருகின்றன. இன்றைக்கு தொழிலாளர்கள் அதிகமாக கல்வி அறிவு இல்லாதவர்களாக இருக்கிறார்கள். இதுவும், பீடித் தொழிலில் ஈடுபட்டிருக்கக் கூடிய தொழிலாளிகளில் 90 சதவிகிதம் படிக்காதவர்களாகத்தான் இருக்கிறார்கள் என்று சொல்லலாம். அப்படியிருக்கும் போது ஒரு விசாரணை நடக்கிறது என்று சொன்னால்—அவர்களுக்கு கையெழுத்து போடத் தெரியவில்லை என்று சொன்னாலும் முதலாளிகளுக்கு வேண்டியவர்களை சாட்சியம் வைத்துக் கொண்டு, அத் தொழிலாளர்கள் மேல் நடவடிக்கை எடுக்கும் அளவிற்கு நியாயமற்ற முறையில் விசாரணைகள் நடக்கின்றன என்பது தெரிந்த விஷயந்தான். ஆகவே தொழிற்சங்கப் பிரதிநிதிகளாக இருக்கக் கூடியவர்களையும் வைத்துக் கொண்டுதான் விசாரணை நடத்தப படவேண்டும் என்கிற ஒரு நோக்கத்தோடுதான் இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். தொழிலாளர் சம்பந்தப்பட்ட பிரச்னையாயிருந்தாலும் சரி, அல்லது முதலாளிகள் சம்பந்தப்பட்ட பிரச்னையாயிருந்தாலும் சரி, எந்தப் பிரச்னையாயிருந்தாலும் சரி விசாரணை செய்யும்போது தொழிற் சங்கப் பிரதிநிதிகளையும் வைத்துக் கொண்டு தான் விசாரணை செய்யப்பட வேண்டும். இது மிகவும் நியாயமான தாகும் என்று அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

SRI N. K. PALANISWAMI : இந்த மசோதா சட்டமான பிறகு முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே தகராறு ஏற்பட்டால் அந்தத் தகராறை எந்தச் சட்டத்தின் கீழ் தீர்க்க வேண்டுமென்பது இதில் விவரமாக இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தம் மிக முக்கியமானதொரு திருத்தமாகும். ஏனெனில், முதலாளிகள், தொழிலாளிகள் இவர்கள் சுமுகமானதொரு உறவோடு இந்தத் தொழிலை நடத்திக் கொண்டு போகும்போது, அதில் சர்க்காரைப் பொறுத்த மட்டில் இந்த சட்டத்தை அமுல் நடத்த ஓரளவிற்கு தொழிலாளிகளின் உதவியைத்தான் பெருமளவு நாடவேண்டிவரும். அப்படி போகும்போது, குறிப்பிட்ட ட்ரேட் யூனியன் பிரதிநிதிகளை வைத்துக் கொண்டு இதுபோன்ற விஷயங்களை பரிசீலனை செய்வது பலவிதமான நன்மைகளைத் தருவதாக இருக்கும். ஆகவே, தொழிற்சங்கப் பிரதிநிதிகளையும் இதில் கலந்து கொள்ளச் செய்தால் நன்றாக இருப்பதோடு, இச்சட்டத்தை நல்ல முறையில் செயல் முறைக்குக் கொண்டு வர அது மிகவும் உதவியாக இருக்குமென்று சொல்லிக் கொண்டு இத்திருத்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை ராஜ்யத்தில் இன்று 10,000 தொழிலாளர்கள் இந்த பீடித் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களில் சங்கம் வைத்துக் கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கை 6,000 கூட இல்லை. சமீபத்தில் குறைந்தபட்ச கூலி கமிட்டிக்கு அங்கத்தினர்கள் போட வேண்டுமென்ற லிஸ்டைப் பார்த்தபோது தொழிற் சங்கங்கள் மிகக் குறைவாகவும் அதிலுள்ள அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவாக இருப்பதைக் கண்டேன். ஆகவே, தொழிற் சங்கங்கள் இல்லாத இடத்தில் இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொண்டால் என்ன நடக்கும் என்று ஆலோசிக்க வேண்டும். தொழிற் சங்கங்கள் வந்த பிறகு சட்டம் கொண்டு வருவதா அல்லது சட்டம் வந்த பிறகு தொழிற்சங்கங்களை வரச் சொல்வதா ? அடுத்தபடியாக இரண்டாவது ஷரத்தைப் பார்த்தால் அதில் 'Inspector can inspect the premises with such assistants, if any, as he thinks fit.' என்று சேர்த்திருக்கிறார்கள். அவருக்கு தொழிற்சங்க நிர்வாகியின் உதவி தேவையாயிருந்தால் அவரை அழைத்துக் கொண்டு போவதற்கு இந்தச் சட்டம் அனுமதிக்கிறது. ஆகவே கொள்கை பூர்வமாக இதை ஏற்றுக் கொண்டிருப்பதால் இந்தத் திருத்தங்களை வாபஸ் பெற வேண்டுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

'In sub-clause (1) (*a*), *add* the following proviso, namely :—

"Provided that such examination or such inquiry shall be conducted in the presence of the representative of the Trade Union of the employees concerned".'

'In sub-clause (1) (*c*), *add* the following at the end :—

"or on a complaint received from the Trade Union representing the employees concerned or from the employees concerned to such effect;" '.

The amendments were put and lost.

Clause 7 was put and carried

*Clause 8.*

MR. SPEAKER : The motion is—

' That clause 8 do stand part of the Bill.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

' In sub-clause (*b*), *omit* the words " where necessary ".'

' In sub-clause (*c*) (ii), *for* the word " five " *substitute* the word " three ".'

SRI N. MARUDACHALAM : Sir, I second the amendments.

MR. SPEAKER : Amendments moved—

' In sub-clause (*b*), *omit* the words " where necessary ".'

' In sub-clause (*c*) (ii), *for* the word " five " *substitute* the word " three ".'

The clause and the amendments are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : " நெசஸரி " என்ற வார்த்தையை எடுக்க வேண்டுமென்பதுதான் எனது திருத்தம். காரணம் தொழிற் சாலைகள் அசுத்தமாயிருக்கின்றன. வீடுகளில் சுத்தமாக வைத்துக்கொண்டிருக்கிற வீடுகளில் ஒரு நாளைக்கு ஒரு வேளை மட்டுமல்ல, பல முறை சுத்தம் செய்யக்கூடிய அளவிற்கு இருக்கிறது. இந்நிலையில் வாரத்திற்கு ஒரு முறையாவது நாம் சுத்தம் செய்ய வேண்டுமென்று சொல்லக்கூடிய நேரத்தில் " நெசஸரி " என்று அதாவது அவசியம் ஏற்படுகிறபோது என்ற அர்த்தத்தில் அந்த வார்த்தை இருப்பதால் அதை எடுத்துவிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதுபோன்று சப்-கிளாஸ் 3-ல் ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை ரீபெயன்ட் வார்னிஷ் செய்ய வேண்டுமென்று இருக்கிறது. அதை ஐந்து வருஷங்களுக்கு ஒரு முறை என்று இருப்பதை குறைந்தபட்சம் மூன்று வருஷத்திற்கு ஒரு முறை என்றாவது இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதுதான் எனது திருத்தம்.

* THE HON. SRI R. VENKATARAMAN : சபாநாயகர் அவர்களே, " where necessary " என்று சொல்லியிருப்பது சுத்தம் செய்வதற்கு மாத்திரம் அல்ல. அந்த இடத்தில் பூச்சி மருந்துகள் உபயோகிக்கவேண்டும் என்று இருந்தால் அந்த இடத்தில் பூச்சி மருந்துகள் உபயோகிக்கவேண்டும் என்பதற்குத்தான் சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு அந்த பிரமிஸஸ்க்குள் வாரத்திற்கு ஒரு முறை சுத்தம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த திருத்தம் அவசியமில்லை என்று கருதுகிறேன். அடுத்தபடியாக வெள்ளை அடிப்பது வருஷத்திற்கு ஒருமுறையாவது இருக்கவேண்டும் என்றும் பெயிண்ட் அடிப்பதற்கு ஐந்து வருஷத்திற்கு ஒரு முறை இருந்தால் போதும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பெயிண்ட் அடிப்பதில் இந்த திருத்தத்தின்படி " மூன்று " வருஷத்திற்கு ஒரு முறை இருக்க வேண்டும் என்று இருந்தால் முதலாளிகளுக்கு அதிகமாக செலவு ஆகும். இதனால் தொழிலாளர்களுக்கு பல தொல்லைகள்தான் உண்டாகும். ஆகவே இந்த திருத்தமும் அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

The amendments were put and lost.

Clause 8 was put and carried.

Clause 9 was put and carried.

### *Clause* 10.

MR. SPEAKER : The motion is—

"That clause 10 do stand part of the Bill".

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following amendment :—

"In sub-clause (2), *for* the words 'one hundred and fifty' *substitute* the words 'one hundred'".

The amendment was duly seconded.

MR. SPEAKER : Amendment moved :—

"In sub-clause (2), *for* the words 'one hundred and fifty' *substitute* the words 'one hundred'".

SRI V. K. KOTHANDARAMAN : இப்போது தொழிற்சாலை நடத்துவதற்கு வேண்டி ஒரு ஆளுக்கு 150 சதுர அடி வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதைப்பற்றி விசாரணை செய்த நேரத்தில் கட்டிடம் கிடைக்கவில்லை என்று சில முதலாளிகள் சொன்னார்கள். வாடகைக்குக் கூட இடம் கிடைப்பதில்லை என்று சில முதலாளிகள் சொன்னார்கள். ஆகவே, இவ்விதம் ஒரு ஆளுக்கு 150 சதுர அடி என்று நாம் தீர்மானித்தால், முதலாளிகளுக்கு இது பாதகமாக இருக்கலாம். ஆகவே 150 என்று இருப்பதை 100 என்று வைத்துக் கொள்ளலாம் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் ஒருமுறையாவது முதலாளிகளுக்கு சாதகமாக பேசியதை நான் வரவேற்கிறேன். ஆனால் இந்த இடத்தில் பேசியதும் தவறாய் போய்விட்டது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இது 150 சதுர அடி அல்ல, 150 கன அடி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கத்தினர் அவர்கள் சொல்வது போல் 100 கன அடி என்று இருந்தால் ரொம்பவும் கஷ்டமாக இருக்கும். ஆதலால், குறைந்தபட்சமாக 150 கன அடியாவது இருக்கவேண்டும் என்று நினைத்துத்தான் இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது. பாக்டரி சட்டத்தில் 350 கன அடி சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு இதில் இருக்கவேண்டும் என்றில்லாவிட்டாலும் 150 கன அடியாவது இருக்கவேண்டும் என்றுதான் இதில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே கனம் அங்கத்தினர் அவர்கள் இந்த திருத்தத்தை வற்புறுத்தமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 10 was put and carried.

Clauses 11 to 16 were put and carried.

*Clause* 17.

MR. SPEAKER : The motion is :

"That clause 17 do stand part of the Bill".

SRI S. M. ANNAMALAI : Sir, I move the amendments standing in my name, namely :

"In clause 17, *for* the word 'nine' *substitute* the word 'eight'.

In clause 17, *for* the word 'forty-eight' *substitute* the word 'forty-three'."

The amendments were duly seconded.

MR. SPEAKER : Amendments moved :

"In clause 17, *for* the word 'nine' *substitute* the word 'eight'.

In clause 17, *for* the word 'forty-eight' *substitute* the word 'forty-three'."

* SRI S. M. ANNAMALAI : ஸர், ஒரு பீடித்தொழிற்சாலையில் வேலை செய்வது என்றால், அங்கே அதிக நேரம் இருந்து வேலை செய்வதால் டி.பி., ஆஸ்த்மா போன்ற நோய்கள் வருகின்றன. குறைந்தபட்சம் எட்டு மணி நேரம் வேலை செய்யவேண்டும் என்று இருந்தாலும் கூட மேற்கொண்டு வேலை செய்தால் இரட்டிப்பு சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் வாரத்திற்கு 48 மணி நேரம் வேலை செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் 48 என்று இருப்பதை 43 என்று திருத்தவேண்டும் என்று நான் சொல்லியிருக்கிறேன். அப்போது தான் தொழிலாளிகளுக்கு இந்தவிதமான நோய்களிலிருந்து தப்பமுடியும். அடுத்தபடியாக 27-வது கிளாஸில் நான் கொடுத்திருக்கிற திருத்தம் என்னவென்றால், ஒரு தொழிற்சாலையில் 240 நாட்கள் வேலை செய்தால், 20 நாட்களுக்கு ஒரு நாள் விடுமுறை கொடுக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் இருந்தால் ஒரு தொழிலாளி 239 நாட்கள் ஒரு தொழிற்சாலையில் வேலை பார்த்தாலும், 240 நாட்கள் வேலை செய்யவில்லை என்ற காரணத்திற்காக 20 நாட்கள் லீவு கிடைக்கவேண்டியதும் கிடைக்காமல் போய்விடுகின்றது. ஆகவே, இந்த கஷ்டத்தை நீக்குவதற்காக ஒரு வாரத்திற்கு ஐந்து நாட்களாவது வேலை கொடுக்கவேண்டும் என்று இருக்கவேண்டும் என்பதுதான் எனது வேண்டுகோள். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : ஸர், பாக்டரி சட்டத்தில் இருக்கக்கூடிய அளவுக்கு இதிலும் வேலை நேரத்தை நிர்ணயிக்கவேண்டும் என்று நினைத்துத்தான் இவ்விதம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதிலிருந்தும் குறைவாக நிர்ணயிக்கவேண்டும் என்று சொல்வது பொருத்தமாக இராது. இப்போது 48 மணி நேரம் என்று இருப்பதே அவர்களுக்கு ஒரு பெரிய நன்மையை செய்வதாக இருக்கிறது. ஆகவே இன்னும் குறைவாக வேலை நேரத்தை நிர்ணயித்தால் அதனால் தொழிலை நடத்துகின்ற முதலாளிகள் கஷ்டப்படுவார்கள். மேலும் இந்த சட்டங்களெல்லாம் பாக்டரி சட்டத்தோடு ஒன்றாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு தான் இவ்விதம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

[13th September 1958

SRI K. ANBAZHAGAN : On a point of explanation, Sir.

MR. SPEAKER : Does the hon. Member want to explain on behalf of Sri Annamalai?

SRI K. ANBAZHAGAN : I want an explanation from the Hon. Minister, Sir.

MR. SPEAKER : All right.

SRI K. ANBAZHAGAN : இந்த திருத்தம் கொடுத்திருப்பதின் நோக்கம் என்னவென்றால், இதில் 240 நாட்கள் வேலை செய்தால் 12 நாட்கள் விடுமுறை பெற முடியும் என்று சட்டத்தில் இருக்கிறது. இதை மாற்றி அதைவிடக் குறைந்த நாட்கள் வேலை செய்யக்கூடியவர்களுக்கும் அதற்கான அளவு விடுமுறை கிடைப்பதற்கு வாய்ப்பை ஏற்படுத்தி கொடுப்பதற்காக குறைந்த அளவில் இத்தனை மணி நேரம் வேலை செய்தால் இத்தனை நாள் மணி நேரம் விடுமுறை என்ற முறையில், (ப்ரபோர்ஷனேட் ஆக) மாதத்தில் இத்தனை நாட்கள் வேலை செய்தால் இத்தனை நாட்கள் விடுமுறை கொடுக்கவேண்டும் என்ற முறையில், இதைத் திருத்தி அமைக்க வேண்டும் என்பதுதான் இந்தத் திருத்தத்தின் நோக்கம் ஆகும்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதை 27-வது செக்ஷன் வரும்போது பார்த்துக்கொள்ளலாம்.

MR. SPEAKER : The question is :

"In clause 17, *for* the word 'nine' *substitute* the word 'eight'".

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is :

"In clause 17, *for* the word 'forty-eight' *substitute* the word 'forty-three'".

The amendment was put and lost.

Clause 17 was put and carried.

*Clause* 17-*A*.

MR. SPEAKER : Sri S. M. Annamalai has given notice of an amendment for the insertion of a new clause. Is he moving it?

SRI S. M. ANNAMALAI : Yes, Sir, I move—

"*After* the existing clause 17, *insert* the following as new clause 17-A :—

'17-A. The employer shall give work to the employee for not less than five days a week except in case if the employee is not willing to work'".

The amendment was duly seconded.

18th September 1958]

MR. SPEAKER : Amendment moved—

" After the existing clause 17, *insert* the following as new Clause 17-A :—

' 17-A. The employer shall give work to the employee for not less than five days a week except in case if the employee is not willing to work '."

*SRI S. M. ANNAMALAI : தலைவர் அவர்களே, நான் முன்னால் கூறியது போல வாரத்திற்கு ஐந்து நாட்கள் வேலை கொடுக்கவேண்டும் என்று இருக்கவேண்டும் என்பது தான் என் வேண்டுகோள்.

*THE HON. SRI R. VENKATARAMAN : இதில் நான் சொல்லுவது என்னவென்றால் "Specific performance of personal contract" என்று சொல்லுவார்கள். ஒருவனுக்கு வேலை கொடுக்கவேண்டும் என்று சொல்லு வதற்கு நமக்கு அதிகாரம் கிடையாது. ஒருவன் ஏற்கனவே வேலையி லிருந்தால், அவனை வேலையிருந்து நீக்கிவிட்டால், அதற்கு என்ன காரணம் என்பதையும் அதற்கு என்ன காம்பன்சேஷன் கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி ஆலோசிக்க முடியும். அதல்லாமல் வேலை கொடுக்க வேண்டும் என்று நாம் சொல்ல முடியாது. ஆகவே இந்த திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ளமுடியாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is :

" After the existing clause 17, *insert* the following as new Clause 17-A :—

' 17-A. The employer shall give work to the employee for not less than five days a week except in case if the employee is not willing to work '."

The amendment was put and lost.

Clause 18 was put and carried.

*Clause* 19.

MR. SPEAKER : The motion is—

That clause 19 do stand part of the Bill.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In clause 19, *for* the word ' five ' wherever it occurs *substitute* the word ' four '.

The amendment was duly seconded.

MR. SPEAKER : Amendment moved :

In clause 19, *for* the word ' five ' wherever it occurs *substitute* the word " four".

*SRI S. M. ANNAMALAI : ஒரு பீடித் தொழிலாளி ஏறத் தாழ 5 மணி நேரம் வேலை செய்த பின்பு ½ மணி நேரம் ஓய்வு கொடுக்க வேண்டுமென்றிருக்கிறது. அதை மாற்றி 4 மணி வேலைக்குப் பிறகு ½ மணி ஓய்வு கொடுக்க வேண்டுமென்பது என்னுடைய திருத்தத்தின் நோக்கம்.

*THE HON. SRI R. VENKATARAMAN: இன்றைக்கு பாக்டரி சட்டத்தில், 5 மணி நேரத்திற்கு மேல், ஓய்வு நேரம் கொடுக்காமல் வேலை செய்யக் கூடாது என்று இருக்கிறது. அதே சட்டம்தான் இங்கும் போடப்பட்டிருக்

இறது. யாராவது ஒருவர் 8 மணிநேரம் வேலே செய்கிருர் என்று வைத்துக் கொண்டால் எப்போது வேண்டுமாளுலும் ½ மணி ஓய்வு அவருக்குக் கொடுக்கலாம். 5 மணி வேலே செய்து விட்ட பிறகு தான் கொடுக்க வேண்டுமென்பது சட்டத்தின் கருத்தல்ல. ஆகவே, இதை 4 மணி என்று திருத்துவதால் எந்த வித பலனும் கிடைக்காது.

The amendment was put and lost.

Clause 19 was put and carried.

*Clause* 20.

MR. SPEAKER : The motion is—

That Clause 20 do stand part of the Bill.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In clause 20, *for* the word 'ten' *substitute* the word 'eight'.

The amendment was duly seconded.

MR. SPEAKER : Amendment moved—

In clause 20, *for* the word 'ten' *substitute* the word 'eight'.

SRI S. M. ANNAMALAI : முன்பு சொன்ன நோக்கம் தான் இந்தத் திருத்தத்தின் நோக்கமும். அதைத் தவிர வேறு ஒன்றுமில்லே.

THE HON. SRI R. VENKATARAMAN : இது ஸ்ப்ரெட் ஓவர் என்ற தலேப்பின் கீழ் வருகிறது. அதாவது ஒரு தொழிலாளி வேலே ஆரம்பித்த நேரத்திலிருந்து, வேலேயை முடித்துக்கொண்டு செல்லும் நேரம் வரையில் 10 மணிக்கு மேல் இருக்கக்கூடாது என்றிருக்கிறது. 8 மணி என்று சொன்னுல், இன்டர்வெல்லே கொடுக்க முடியாது. ஸ்ப்ரெட் ஓவருக்கும் அவர்ஸ் ஆப் வொர்க்கிங்குக்கும் உள்ள வித்தியாசத்தை அங்கத்தினர்கள் உணர வேண்டும்.

The amendment was, by leave, withdrawn.

Clause 20 was put and carried.

*Clause* 21.

MR. SPEAKER : Motion moved :

That Clause 21 do stand part of the Bill.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In sub-clause (2), *for* the word 'three' *substitute* the word 'thirty'.

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

*For* sub-clause (3), *substitute* the following :

'(3) For such weekly holiday allowed under sub-section (*b*), every employee shall be paid at a rate equal to the daily average of his total full time earnings for the days on which he worked during the week immediately preceding such weekly holiday, exclusive of any overtime and bonus, but inclusive of dearness allowance'.

13th September 1958]

The amendment was duly seconded.

MR. SPEAKER : Amendments moved—

In sub-clause (2), *for* the word ' three ', *substitute* the word ' thirty '.

*For* sub-clause (3), *substitute* the following :—

' (3) For such weekly holiday allowed under sub-section (1), every employee shall be paid at a rate equal to the daily average of his total full time earnings for the days on which he worked during the week immediately preceding such weekly holiday, exclusive of any overtime and bonus, but inclusive of dearness allowance.'

* SRI S. M. ANNAMALAI : அதாவது ஒரு தொழிலாளி ஞாயிற்றுக்கிழமை விடுமுறையாக இருந்தால், விடுமுறையன்று இலை நனைத்தல், கத்தரித்தல் முதலிய வேலைகளுக்காகச் சென்றால், அந்தத் தொழிலாளி 3 நாட்களுக்குள் விடுமுறையை எடுத்துக்கொள்ளவேண்டு மென்றிருக்கிறது. அது 30 நாட்களுக்குள் என்று இருக்கவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அப்படி இருந்தால், சேர்ந்தாற்போல 2, 3 நாட்கள் விடுமுறை எடுத்துக்கொள்ள வசதியாக இருக்கும். ஆகை யால், இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN :" வீக்லி ஹாலிடேஸ் என்று சொல்லி விட்டு, அவர்களுக்கு அந்த வாராந்திர விடுமுறை நாட்களுக்குச் சம்பளம் கொடுக்காத காரணத்தினால், அவர்களுக்கு வாழ்க்கைக்கேற்ற ஊதியம் கிடைக்காத காரணத்தால், 12 மணி நேரம், 14 மணி நேரம் என்று இரவு, பகல் பாராமல் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்.

(Mr. Deputy Speaker in the Chair.)

இன்றைக்கு தனிப்பட்ட தொழிலாளி மட்டுமல்ல, அந்தக் குடும்பத்தில் உள்ள அத்தனை பேரும் தொழிலில் ஈடுபட்டு வருகிறார்கள். இந்த நிலைமை யிலே சம்பளம் இல்லாமல் வாராந்திர விடுமுறை விடுவதால், அவர்கள் திருட்டுத்தனமாக உற்பத்தி செய்யக்கூடும். அதே நேரத்தில், போதுமான வருவாய் இல்லாத நேரத்தில் சம்பளம் இல்லாத விடுமுறை விடுவது சரி யல்ல என்ற காரணத்தினால், எத்தனை நாட்கள், எத்தனை மணி வேலை செய்திருக்கிறார்கள் என்று கணக்கிட்டு அந்த வாரத்தில் சம்பளத்தோடு விடுமுறை கொடுக்கவேண்டும். இந்த நோக்கத்தோடுதான் நான் திருத் தத்தைக்கொண்டு வந்திருக்கிறேன். இது மிகவும் நியாயமான திருத்தம என்பது தெரிந்த விஷயம் என்று சொன்னாலும், கனம் அமைச்சர் அவர் கள் ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கலாம். இருந்தாலும், இதை நன்றாகச் சிந்தித்து, பரிசீலனை செய்து ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதிலே " Every beedi industrial premises shall remain entirely clo ed except for wetting of wrapping leaves on one day in the week " என்பது தான் இதன் பொருள். ஆனால் ' except for wetting of wrapping leaves ' என்று இடையிலே வந்திருப்பது " அம்பிக்யூயிட்டியை உண்டு பண்ணாதா ? இதைத் தெளிவுபடுத்தவேண்டும். இந்த அடிப்படையில் ஒரு வாரத்தில் ஒரு நாள் முழுவதும் பாக்டரி மூடியிருக்க வேண்டும். "வெட்டிங் ஆப் ராப்பிங் லீவ்ஸ்"-க்காக திறந்து வைத்து சிலர் கள்ளத்தனமாக பீடி சுற்றுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும். தவிர்க்க முடியாத காரணத்தினால் ஒரு தினம் கொடுக்கவேண்டுமென்பது

[Sri K. Sattanatha Karayalar] [13th September 1958

கொடுக்கப்படாமல் இருக்கும். திட்ட வட்டமாக "It shall remain closed for a day" என்று தெளிவாக இருக்கவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஸ்ரீ அண்ணாமலை கொடுத்திருக்கும் திருத்தம் இந்த ஷரத்துக்குப் பொருந்தாது. இந்த ஷரத்து வாரத்தில் ஒரு நாள் கட்டாய விடுமுறை கொடுக்கவேண்டுமென்பது. கொடுக்க முடியாமல் போனால், அந்த விடுமுறை நாளை, வாராந்தர விடுமுறை நாளுக்கு 3 நாள் முன்போ, பின்போ, கொடுத்து விடவேண்டும். விடுமுறை நாளுக்கு, 3 நாளுக்கு முன்னரோ பின்னரோ கொடுத்து விடவேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்து தொழிலாளர்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டுமென்பது நல்லது. 30 நாட்களுக்குள் என்று சொல்லி விட்டால், வாராந்தர விடுமுறை கொடுக்காமல், 20 நாட்கள் வேலை செய்த பிறகு 3 நாள் சேர்த்துக் கொடுக்கலாம். இது அவர்களுடைய தேக ஆரோக்யத்திறகு நல்லதல்ல.

ஸ்ரீ கோதண்டராமன் அவர்களின் திருத்தம் மினிமம் வேஜஸ் ஆக்டின் கீழ் வரக் கூடியது. குறைந்த பட்சக் கூலி நிர்ணயம் செய்யும் போது, மாதச் சம்பளத்தை 26-ஆல் வகுத்து நிர்ணயம் செய்கிறார்கள். 26-ஆல் வகுப்பதால் தினக்கூலி நிர்ணயம் செய்யும்போது வாராந்தர விடுமுறைக்கான கூலியையும் அந்த தினக் கூலியோடு சேர்த்து நிர்ணயித்து விடுகிறார்கள். மாதாந்தர சம்பளத்திற்கும், தினக் கூலிக்கும் இது தான் வித்தியாசம். ஆகவே, இந்தத் திருத்தம் இதிலே வராது. குறைந்த பட்சக் கூலி நிர்ணயம் செய்யும் போது அதையும் சேர்த்துத் தான் நிர்ணயம் செய்யப்படுகிறது.

கனம் சட்டநாத கரையாளர் சொன்னது—ஏமாற்றுவதற்கு இடம் இருக்கிறது என்பதில் உண்மை இருக்கிறது. அதற்காகத் தான இன்ஸ்பெக்டர் வைத்திருக்கிறோம். அவா இதையெல்லாம் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்தத் தொழிலில் ஒரு நாள் வெட்டிங் செய்யவில்லையென்றால், மறு நாள் வேலையில்லாமல் போய்விடும். அதனால் தான் ஞாயிறறுக்கிழமை வெட்டிங்குக்காக ஏற்பட்ட ஆட்கள் வேலை செய்யலாம் என்று இருககிறது. ஆனால், பாக்டரி மூடியிருக்கும். வேறு தொழிலாளிகள் வேலை செய்யக்கூடாது. இலை நினைப்பவர்கள் மட்டும் அந்த இடத்தில் வேலை செய்வதற்கு அனுமதிககப்படும் என்று கண்டிருக்கிறது.

ஆகவே, இந்தத் திருத்தங்களையெல்லாம் என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

DEPUTY SPEAKER: The question is—

In sub-clause (2) *for* the word 'three', *substitute* the word 'thirty'.

The amendment was put and lost.

The amendment of Sri V. K. Kothandaraman was, by leave, withdrawn.

Clause 21 was put and carried.

*Clause* 22.

DEPUTY SPEAKER: Motion moved—

That clause 22 do stand part of the Bill.

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I move—

In sub-clause (1), *after* the figure and word '26th January', *insert* the figure and word '1st May'.

The amendment was duly seconded.

13th September 1958]

DEPUTY SPEAKER : Amendment moved :

In sub-clause (1), after the figure and word ' 26th January ' *insert* the figure and word ' 1st May '.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஸார், இந்த நேஷனல் அண்டு பெஸ்டிவல் ஹாலிடேய்ஸ் மசோதா தனியாக வருகிறது என்ற போதிலும், இதிலும் தேசீய விடுமுறை நாட்களைப்பற்றி வருகிறது. ஆகவே தான் பல முறைகள் சொன்ன போதிலும், இப்போது மே தினம் எல்லோரும் கொண்டாடக் கூடிய தினம் இந்திய தேசத்திலே மட்டுமல்ல, உலகம் பூராவிலும் எந்த வித கட்சிப் பாகுபாடு இல்லாமல், எந்த வித ஜாதி, மத, இன பாகுபாடு இல்லாமல் எல்லா மக்களும் கொண்டாடக்கூடிய அளவில் இருந்து வருகிறது என்பது மட்டுமல்லாமல் இன்றைக்கு தேசிய தினமாக நமது சர்க்கார் ஒப்புக்கொள்ளவில்லை என்று சொன்னாலும், சம்பளத் தோடு அந்த நாளை விடுமுறை நாளாக விடவேண்டுமென்று ஒப்புக் கொள்ளவில்லை என்று சொன்னாலும், விடுமுறை விடவேண்டும், அதற்கு பதிலாக மற்றொரு நாள் அதற்கு முன்போ, அதற்குப் பின்போ வேலை செய்து கொள்ளலாம் என்ற அளவுக்கு ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் காரணத்தினால் தான் சர்வ தேச தினமாக இருக்கக்கூடிய இந்த மே தினத்தை இதில் சேர்த்துக் கொள்ளவேண்டு மென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அவர் ஏற்றுக்கொள்ள மாட் டார் என்பது தெரியும். பெஸ்டிவல் ஹாலிடேஸ் மசோதாவில் இடம் இருக்கிறது. அதிகப்படித் தொழிலாளர்கள் எந்த பாக்டரிகளில் விரும்பு கிறார்களோ அங்கேயெல்லாம் இந்த நாள் விடுமுறையாகக் கொடுக்கப்பட வேண்டுமென்று விதி இருக்கும் காரணத்தினால், இது அவசியமில்லை என்று சொல்லலாம். பல தொழில்களிலே மெஜாரிட்டி தொழி லாளர்கள் விரும்பியும் கூட ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமை இருக்கிறது. அந்தக் காரணத்தினால் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் சச்சரவு ஏற்படக்கூடிய நிலைமை இருந்துவருகிறது. இம்மாதிரி சச்சரவுகளுக்கு இடம் கொடுக்காத நிலையிலே இந்தச் சட்டத்திலேயே கொண்டுவந்து விட்டால் மிகவும் நலமாயிருக்கும் என்ற நோக்கத்தோடுதான் நான் இதை வலி யுறுத்துகிறேன். அதே சமயத்தில் மே தினத்தை விரும்பக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள் என்று கேட்கலாம். அப்படிச் சொல்லுவது என்றால், அது போன்ற மற்ற மற்ற தினங்களை விரும்பாதவர்களும் இருக்கலாம். அப்படியிருந்தும் அவைகள் விடுமுறை நாட்களாக இருக்கவேண்டுமென்று சொல்லுகிறோம். அது போலவே இந்த தினத்தையும் கருதவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri J. MATHA GOWDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மே தினத்தை 7 விடுமுறை நாட்களில் ஒன்றாகச் சேர்த்து விடுமுறை அளிக்கவேண்டும் என்பது சர்வதேச தொழிற்சங்க சம்மேளனத்தின் கொள்கை என்று சொன்னாலும் கூட, இந்த விஷயத்திலே தொழிற் சங்கத் தலைவர்களிடத்திலே வித்தியாசமிருக்கிறது. சில தொழிற்சங்கத் தலைவர்கள் இதை விடுமுறை தினமாக்க வேண்டாமென்றும், சிலர் வேண்டு மென்றும் சொல்லுகிறார்கள். தொழிலாளர்களிடையே இது குறித்து பாகுபாடு இல்லையென்று சொன்னாலும், தொழிற்சங்கத் தலைவர்களிடை யேயும், அரசியல் கட்சிகளிடையேயும் வேறுபாடு இருப்பதன் காரணத்தி னால், இந்த மே தினத்தை விடுமுறை தினமாகச் செய்யவேண்டுமென் பதை நான் எதிர்க்கிறேன். அதிகமான தொழிலாளிகள் விடுமுறை விடவேண்டும் என்று கேட்கும்பட்சத்தில் கொடுக்கலாம் என்று தேசிய விடுமுறை நாட்கள் சட்டத்தில் சொல்லியிருக்கிறோம். ஆகவே இந்த மே தினத்தன்று கட்டாயமாக விடுமுறை அளிக்கவேண்டுமென்பதை நான் வன்மையாகக் கண்டித்து, கொடுக்கக்கூடாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

[13th September 1958

SRI M. P. SARATHI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, மே தினம் என்பது தொழிலாளரைப் பொறுத்தவரையில் ஒரு முக்கியமான தினம் என்பதை கனம் அமைச்சர் அவர்களும் கூட ஒப்புக்கொள்வார்கள். எப்படி ஆகஸ்ட்டு 15, ஜனவரி 26 போன்ற நாட்கள் முக்கியமாகக் கருதப் படுகின்றனவோ, அதேபோன்று இந்த தொழிலாளர் வர்க்கம் இந்த மே தினத்தை ஒரு சுதந்திர தினமாகக் கருதுகிறார்கள். இதில் கட்சி வேறுபாடு இருக்கிறது என்று எனக்கு முன் பேசிய அங்கத்தினர் சொன்னார். எல்லாக் கட்சிகளும் மே தினத்தை ஒரு முக்கிய தினம் என்று ஒப்புக்கொள்ளு கின்றன. மேலும், தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும் தகராறு ஏற்படுமென்றும் சொல்லப்பட்டது. அம்மாதிரி தகராறு ஏற்படுவதற்கு வழி யில்லை. உலகத்திலுள்ள எல்லா தொழிற்சங்கங்களும் இந்த மே தினத்தை ஒரு சிறந்த நாளாகக் கருதுவதால், அதை ஏற்றுக்கொள்ளுமாறு கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த தேசீய விடுமுறை நாட்களைப் பற்றி தனியாக சட்டம் கொண்டு வருகிறோம். அந்த சட்டத்திலே மெஜாரிட்டியான தொழிலாளர் கள் விரும்பினால் இந்த மே தினம் நிச்சயமாக விடுமுறையாக விடப்பட வேண்டுமென்று கண்டிருக்கிறோம். அதற்கு முதலாளியும் எதிர்ப்பு சொல்ல முடியாது, சர்க்காரும் எதிர்ப்பு சொல்ல முடியாது. தொழி லாளர்கள்தான் தீர்மானம் செய்யவேண்டும். மெஜாரிட்டியின் அபிப்பிரா யப்படி செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம்.

SRI M. P. SARATHI : இதற்கும் தேர்தல் வைக்கவேண்டி யிருக்கும்.

*THE HON. SRI R. VENKATARAMAN: தேர்தல் நடத்தவேண்டியது இல்லை. இந்த மசோதாவிலிருக்கும் 22-வது பிரிவிற்கும் புதிதாகக் கொண்டுவரப்பட்டிருக்கும் சட்டத்திற்கும் சில மாறுதல்கள் இருக்கின் றன. புதிதாகக் கொண்டு வந்த சட்டத்திலே பெரும்பாலான தொழி லாளிகள் விரும்பினால் நிச்சயமாக விடுமுறை அளிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். ஆனால் இது இங்கு காணப்படவில்லை. இந்தப் பிரிவையே எடுத்துவிடலாமென்று நினைக்கிறேன். இந்த தேசீய விடு முறை நாட்கள் சட்டமானது பீடித் தொழிலாளருக்கும் செல்லுபடியாகும். ஆகவே இந்த செக்ஷனை எடுத்துவிடலாமென்று நினைக்கிறேன்.

Sir, I move—

'That clause 22 be deleted'.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 22 be deleted'.

The amendment was put and carried.

Clauses 23 and 24 were put and carried.

*Clause* 25.

DEPUTY SPEAKER : The motion is—

That clause 25 do stand part of the Bill.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

*Add* the following proviso at the end :—

'Provided that where an employee wants a certificate of age on an examination and personal belief of a Civil Assistant Surgeon, such a certificate shall be issued free of cost.'

The amendment was duly seconded.

13th September 1958]

DEPUTY SPEAKER : The question is—

'Provided that where an employee wants a certificate of age on an examination and personal belief of a Civil Assistant Surgeon, such a certificate shall be issued free of costs.'

The amendment was put and lost.

Clause 25 was put and carried.

Clause 26 was put and carried.

*Clause* 27.

DEPUTY SPEAKER : The motion is—

That clause 27 do stand part of the Bill.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

*For* sub-clause (1) *substitute* the following :—

'(1) Every employee shall be allowed in the subsequent calendar year, leave with wages for a number of days calculated . . .

After clause 27, *insert* the following as new clause 27-A—

'27-A. *Sick leave with wages.*—Every employee shall be eligible for sick leave of 15 days in a calendar year with wage calculated at half the average rate of wages paid to him in the week immediately preceding the date on which he avails this sick leave.'

The amendments were duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In sub-clause (1) *for* the figure '240' wherever it occurs *substitute* the figure '200'.

"In sub-clause (2), *for* the word 'two-thirds' *substitute* the word 'three-fifths'.

*Omit* the proviso to sub-clause (5).

The amendments were duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : உதவி சபாநாயகர் அவர்களே, பொதுவாக இப்பொழுது லீவு வசதி எப்படியிருக்கிறது என்றால், வருடத்திலே 240 நாட்களுக்கு ஒரு தொழிலாளி வேலை செய்திருந்தால், 20 தினங்களுக்கு ஒரு தினம் லீவு கொடுக்கப்படும். மாதக் கணக்கில் பீடித் தொழிலாளருக்கு வேலை கிடைக்காமலிருப்பது நமக்கெல்லாம் தெரியும். இன்றைக்கு முதலாளிகள் நினைத்தால் பாக்டரியை மூடிவிடுவார்கள், வேலை கொடுக்கமாட்டார்கள் என்ற நிலைமைதான் இருக்கிறது. அனால் அமைச்சர் அவர்கள் "அதற்காகத்தான் இந்த சட்டத்தைகொண்டு வருகிறோம்" என்று சொல்லலாம். இன்றையதினம் இந்த பீடித் தொழிலிலே ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகளில் பெரும்பாலோர் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள். மேலும் அவர்கள் தொடர்ந்து வேலை பார்க்கக்கூடிய நிலைமையில் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள். இந்த பீடித் தொழி

லாளர் எப்பொழுதுமே க்ஷய ரோகம் யோன்ற வியாதிகளால் பீடிக்கப்படு கிறவர்கள். இந்தக் காரணத்தால் அடிக்கடி வேலே செய்யமுடியாத நிலேயிருப்பதை நாம் பார்க்கிறோம். அதன் காரணமாக, 240 தினங் களுக்கு வேலே செய்தால் தான் 20 தினங்களுக்கு ஒரு தினம் லீவு கொடுக்கவேண்டுமென்பதை நீக்கிவிட்டு, எத்தனே நாட்கள் அவர்கள் வருடத்திலே வேலே செய்திருக்கிறார்களோ, அத்தனே நாட்களுக்கு 20 தினங் களுக்கு ஒரு தினம் லீவு கொடுக்கவேண்டுமென்ற அடிப்படையிலே இந்த பிரிவு அமையவேண்டுமென்ற நோக்கத்தோடு இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். தயவு செய்து பீடித் தொழிலாளர்கள் மீது கருணேவைத்து இதையாவது அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **Sri S. M. ANNAMALAI** : ஏற்கெனவே நான் 17-வது பிரிவில் பேசினபொழுது 27-வது பிரிவு வரட்டும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். என்னுடைய திருத்தம் என்னவென்றால் 240 நாட் களுக்குப் பதிலாக 200 நாட்கள் என்று மாற்ற வேண்டுமென்பதுதான்.

என்னுடைய அடுத்த திருத்தம் இரண்டாவது உப-பிரிவில் 2/3-க்கு பதிலாக 3/5 என்று மாற்ற வேண்டுமென்பதுதான். ஜனவரி 1-ம் தேதி ஒரு தொழிலாளி வேலேக்கு வந்தால் 240 நாள் வேலே செய்திருக்க வேண்டும். மற்ற மாதங்களில் வந்தால் மீதி இருக்கும் மொத்த நாட் களில் 2/3 பாகம் வேலே செய்திருக்க வேண்டும் என்று மசோதாவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை 3/5 என்று மாற்றுவதற்காக திருத்தம் கொடுத்திருக்கிறேன்.

என்னுடைய மற்றொரு திருத்தம் ஐந்தாவது உப பிரிவின் கீழ் உள்ள 'ப்ரொவைஸோவை' நீக்கிவிட வேண்டுமென்பதுதான். அதாவது, ஒரு ஆண்டில் ஒரு தொழிலாளி லீவு எடுக்கவில்லே என்றால், அந்த ஆண்டி னுடைய லீவை அடுத்த ஆண்டில் எடுத்துக்கொள்ளலாம் என்று இருப் பதில், 30 நாட்களுக்கு மேல் சென்ற வருஷ லீவை எடுக்க முடியாது என்று இந்த மசோதாவில் கண்டிருக்கிறது. சென்ற ஆண்டில் எடுக்காமல் எவ்வளவு லீவு இருந்த போதிலும், எல்லாவற்றையும் சேர்த்து தொழி லாளி எடுத்துக்கொள்ளலாம் என்பதுதான் என்னுடைய திருத்தத்தின் நோக்கம். தயவு செய்து இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : (Rose).

DEPUTY SPEAKER : The hon. Member has already spoken.

**Sri V. K. KOTHANDARAMAN** : என்னுடைய இன்னொரு திருத்தத்தைப்பற்றி பேச மறந்துவிட்டேன். (சிரிப்பு) அதுபற்றி ஒரு அபிப் பிராயம் சொல்ல வேண்டியிருக்கிறது.

நான் முதலிலேயே இந்த பீடித் தொழிலாளிகள் அடிக்கடி வியாதி யால் பீடிக்கப்படுகிறார்கள் என்று சொன்னேன். அதன் காரணமாகத் தான் 27-ஏ என்ற புது பிரிவை சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஒரு திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இந்தத் தொழிலாளிகளுக்கு 15 நாட்களுக்கு ஸிக் லீவு கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். ஆகவே, இந்தப் புதிய பிரிவை மசோதாவில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அமைச்சர் அவர்களேக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **The Hon. Sri R. VENKATARAMAN** : மிஸ்டர் டெப்யூடி ஸ்பீக்கர், இந்த 27-வது ஷரத்தானது இப்பொழுது இருக்கிற பாக்டரி சட்டத்தை அப்படியே காப்பி அடித்து வைத்திருக்கிறது. பாக்டரி சட்டத்தி லிருப்பதில் எந்தவிதமான மாறுதலேயும் செய்யாமல் இந்தப் பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறது. எல்லாத் தொழிலாளர்களுக்கும் ஒரே விதமாண

'யுனிபார்ம் கண்டிஷன்ஸ்' வேண்டுமென்பதற்காக நாம் கொண்டு வருகிற சட்டங்கள் எல்லாவற்றிலும் இம்மாதிரி ஒரே அடிப்படையில் லீவுகளை வகுத்து வருகிறோம். இந்த மசோதாவில் ஏதாவது மாறுதல் செய்தோமானால் தொழிலாளிகளுக்குள் மாறுபாடுகள், வித்தியாசங்கள் ஏற்பட்டுவிடும். அதனால் மனக்கசப்பு உண்டாகும். ஆகவேதான் எல்லோரும் பொதுவாக ஒத்துக்கொள்ளும் நிலையில் இருக்கக்கூடிய ஷரத்தை எல்லா சட்டங்களிலும் சேர்த்துக்கொண்டு வருகிறோம். ஹோட்டல் பில்லில் இம்மாதிரிதான் செய்தோம். இப்பொழுது பீடி பில்லில் இம்மாதிரி செய்திருக்கிறோம். பாக்டரி சட்டத்திலும் இம்மாதிரியே இருக்கிறது. எல்லாவற்றிலும் இதே மாதிரியாகச் செய்து கொண்டு வருகிறோம்.

அடுத்தபடியாக, அண்ணாமலை அவர்கள் வேலை கொடுக்காவிட்டால் என்ன செய்வது, 240 நாட்கள் வேலை செய்ய முடியாதே என்ற பிரச்னையை எழுப்பினார்கள். அவர்களை 'எக்ஸ்ப்ளனேஷன்' 2-ஐ படிக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

Explanation 2 (*a*) : any days of lay off, by agreement or contract as permitted under the standing orders of the beedi industrial premises concerned :

இந்த நாட்களெல்லாம் வேலை செய்த நாட்களாகக் கருதப்படும். இதுவரையிலும் இவர்களுக்கு 'ஸ்டாண்டிங் ஆர்டர்ஸ்' கிடையாது. இந்தச் சட்டம் அமுலுக்கு வந்தவுடன் 'ஸ்டாண்டிங் ஆர்டர்ஸ்' செய்யவேண்டும். 'ஸ்டாண்டிங் ஆர்டர்ஸ்' செய்யப்பட்டுவிட்டால் அவர்களுக்கு எந்த நாட்களுக்கு வேலை கொடுக்கப்படவில்லையோ அவைகளையெல்லாம் 'லே ஆப்' நாட்களாகக் கருதப்படும். வேலை கொடுக்காமல் விடப்பட்டால் அந்த 'லே ஆப்' நாட்களெல்லாம் வேலை செய்த நாட்களாக கணக்கிற்காக எடுத்துக்கொள்ளப்படும் என்று இருப்பதனால் தொழிலாளர்களின் நலன் நன்றாக பாதுகாக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஸ்ரீ கோதண்டராமன் 'ஸிக் லீவு' கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். ஏதோ இவ்வளவு நாட்கள் கஷ்டப்பட்டு ஏழு பண்டிகை நாட்களுக்கு விடுமுறை கொடுக்கப் போகிறோம். இதையெல்லாம் எல்லோருக்கும் நல்ல முறையில் அமுல் நடத்திய பிறபாடு, அடுத்தபடியாக ஸிக் லீவு பற்றி பார்த்துக்கொள்ளலாம் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

* SRI S. M. ANNAMALAI : ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் ஸார், வேலை செய்யாத நாட்கள்கூட வேலை செய்த நாட்களாக கருதப்படும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் 12 நாட்கள் லீவு எடுக்க வேண்டியது குறைகின்றதே என்பது என்னுடைய வருத்தம்.

THE HON. SRI R. VENKATARAMAN : For the purpose of calculation of 240 days, this will be taken into account.

அதாவது அவர்களுக்கு லீவு இல்லாமலே போய்விடாது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

" *For* sub-clause (1), *substitute* the following :—

' (1) Every employee shall be allowed in the subsequent calendar year, leave with wages for a number of days calculated ' "

The amendment was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" In sub-clause (1), *for* the figure '240' wherever it occurs *substitute* the figure '200'.

" In sub-clause (2), *for* the word 'two-thirds' *substitute* the word 'three-fifths' "

" *Omit* the proviso to sub-clause (5)."

The amendments were put and lost.

DEPUTY SPEAKER : I was told that the Hon. Minister has moved for the renumbering of the clauses. For the present, I shall put the clauses, as they are given here to the vote of the House.

Clause 27 was put and carried.

DEPUTY SPEAKER : I shall now put the amendment moved by hon. Member Sri V. K. Kothandaraman for the insertion of a new clause, viz., 27-A. The question is—

After clause 27, *insert* thef ollowing as new lcause 27-A—

'27-A. *Sick leave with wages*—Every employee shall be eligible for sick leave of 15 days in a calendar year with wage calculated at half the average rate of wages paid to him in the week immediately preceding the date on which he avails this sick leave.'

The amendment was put and lost

Clause 28 was put and carried.

*Clause* 29.

DEPUTY SPEAKER : The motion is—

That clause 29 do stand part of the Bill.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" *For* the existing clause, *substitute* the following :—

29. *Application of the payment of wages Act*, 1936 *and the Minimum Wages Act*, 1948 *to beedi industrial premises*.—(1) Notwithstanding anything contained in the Payment of Wages Act, 1936 and the Minimum Wages Act, 1948 the said Acts or any of the provisions thereof or the rules made thereunder shall apply to all or any class of employees in beedi industrial premises to which this Act applies.

(2) The Inspector appointed under this Act shall be deemed to be the Inspector for the purpose of the enforcement of the provisions of the said Acts within the local limit of his jurisdiction.' "

The amendment was duly seconded

The amendment was put and lost.

Clause 29 was put and carried.

13th September 1958]

*Clause* 30.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 30 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"*For* the existing clause, *substitute* the following :—

'30. *Special Provisions.* (1) The Government shall permit the wetting or cutting of wrapping leaves by male and female employees outside the beedi industrial premises.

(2) The Government shall permit the ring labelling of beedies by female employees only outside the beedi industrial premises.

(3) The employer shall maintain in the prescribed form a record of the work permitted under sub-sections (1) and (2) to be carried on outside the beedi industrial premises.

(4) Save as otherwise provided in this section, no employer shall require or allow any manufacturing process connected with the production of beedies to be carried on outside the beedi industrial premises.' "

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : I want Mr. Kothandaraman to explain his amendment, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : பெண் தொழிலாளர்கள் மட்டிலும் வீட்டில் இலை நனைத்து வெட்டுவதற்கு அனுமதிக்கப்படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பெண்களோடு சேர்ந்து ஆண்களும் இவ்வாறு அனுமதிக்கப்பட வேண்டுமென்பதுதான் என்னுடைய திருத்தம்.

இரண்டாவதாக, இப்பொழுது ஒவ்வொரு ஊரிலும் ஆயிரக்கணக்கான பெண்கள் பீடிகளை வெளியிலே கொண்டுபோய் ரிங் போடுகிறார்கள். ஆகவே, வெளியிலே எடுத்துக்கொண்டுபோய் ரிங் போடுவதையும் அனுமதிக்க வேண்டுமென்று ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதைப் போலவே இம்மாதிரி தொழிலாளிகள் அனுமதிக்கப்படுவதுபற்றி முறையான ரிகார்டுகள் வைக்கப்பட வேண்டுமென்பது மற்றொரு திருத்தம். இந்தத் திருத்தங்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இந்தப் பிரிவிலே பெண்கள் சில குறிப்பிட்ட வேலையை, அதாவது இலையை நனைப்பதையும், வெட்டுவதையும் வீட்டிலேயே செய்துகொண்டு வரலாம் என்று அனுமதிக்கப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதுதான். பெண்கள் பாக்டரிகளில் போய் வேலைசெய்வது கஷ்டமாக இருக்கும். இவர்கள் வீடுகளிலேயே குடும்ப வேலைகளையும் பார்த்துக்கொண்டு, இந்தத் தொழிலையும் செய்து சம்பாதித்துக்கொண்டு வருகிறார்கள். இப்பொழுது, பெண்களுக்கு பர்மிஷன் வாங்குவது, முதலாளிகள் கையில் விடப்பட்டிருக்கிறது. துரதிர்ஷ்ட வசமாக இதற்கு ஒரு திருத்தம் நான் கொடுக்கவில்லை. தொழிலாளிக்குக் கொடுக்க வேண்டிய பர்மிஷன் முதலாளி கையில் இருப்பது நல்லதல்ல. ஆகவே, இந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது சாதாரணமாக வேலை கொடுக்கும் பொறுப்பு முதலாளிகள் கையில் இருக்கிறது. தொழிலாளிகள் வீட்டில் வேலைசெய்ய பர்மிஷன் வேண்டுமென்றால், முதலாளி வேலை கிடையாது என்றால் பிரயோஜனம் இருக்காது. ஆகவே நடைமுறையை ஒட்டி, முதலாளிகளுக்கு இந்த பர்மிஷன் கொடுப்பதாகப் போட்டிருக்கிறோம். கனம் கோதண்டராமன் சொல்லுவது போல், ஆண், பெண் இருவரும் வீட்டில் வேலை செய்யலாம் என்று போட்டால், இந்த சட்டமே உடைந்து விடும். ஆகவேதான் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

The amendment was by leave withdrawn.

Clauce 30 was put and carried.

Clauce 31 was put and carried.

*Clause* 32.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 32 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move —

"In sub-clause (1), *add* the following at the end—'in the presence of the representative of the trade union concerned.'"

"In sub-clause 2 (b), *omit* the words 'or without'."

SRI S. M. ANNAMALAI : I second the amendments, Sir. I move—

"In sub-clause (1), *for* the word 'six' *substitute* the word 'three'."

SRI M. P. SARATHI : I second the amendment.

SRI V. K. KOTHANDARAMAN : தொழிலாளிகள் பேரில் நடவடிக்கை எடுக்கும் நேரத்தில், விசாரணை செய்து வேலையிலிருந்து நீக்கக் கூடிய நிலைமை இருக்கிறது. நல்ல முறையிலே விசாரணை நடத்த, தொழிலாளிகள் பிரதிநிதிகளையும் வைத்து விசாரணை நடத்தவேண்டும். பல சந்தர்ப்பங்களிலே, தொழிலாளிகள் பிரதிநிதிகளிடம் தனியாகவும், விசாரணை செய்யும் நிலைமை இருக்கிறது. ஆகவே, சப் கிளாஸ் 2 (பி)-யில், "with" or "without" என்று இருக்கிறது. இப்பொழுதே பார்க்கிறோம் தொழிலாளிகளைப் பழிவாங்கும் எண்ணம் இருப்பதை. விசாரணை பல மாதங்கள், வருஷங்கள் ஆகும். ஆகவே, அவர்கள் குற்றவாளியல்ல, திருப்பி வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லும்போது, சம்பளம் கொடுக்கப்படாத நிலைமையில்தான் இருந்து வருகிறோம். நூற்றுக்கு இரண்டு பேருக்கு சம்பளம் கிடைக்கிறது. ஆகவே, சம்பளத்தோடு எடுக்க வேண்டும் என்று போடவேண்டியது அவசியம். "without" என்று போட்டுவிட்டால், சும்மா இருக்கும் வாய்க்கு, அவல் கிடைத்த மாதிரி ஆகிவிடும். ஆகவேதான் "with out" என்பதை நீக்க வேண்டும் என்று திருத்தம் கொண்டுவந்து இருக்கிறேன்.

* SRI S. M. ANNAMALAI : மற்ற தொழில்களைப் போன்றது அல்ல இந்த பீடித் தொழில். அமைச்சர் இது பாக்டரி சட்டத்தில் இருப்பதுபோல் இருப்பதாகச் சொன்னார்கள். இந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அடிக்கடி ஆஸ்த்மா, புற்று நோய் போன்றவைகள் வருகின்றன. அதனால் அவர்கள் மிகக் கஷ்டப்படுகிறார்கள். அதற்காக என் திருத்தம் அவசியம்.

13th September 1958] [Sri S. M. Annamalai]

குறைந்த பட்சம் ஆறுமாதம் என்றிருப்பதை, மூன்று மாதம் என்று திருத்த வேண்டும். ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் சொன்னதுபோல், இன்ஸ்பெக்டர்கள் அவர்கள் விசாரணை செய்த பிறகு, வேலைக்கு எடுக்கும் போது கட்டாயம் கூலியோடுதான் எடுக்க வேண்டும்.

* THE HON. SRI R. VENKATARAMAM : இந்தத் தொழில் தகராறுகளில் நியாயம் எப்பொழுதும் ஒரே பக்கத்தில் இருப்பதில்லை. சில தவறுகள் தொழிலாளிகள் பேரிலும், சில முதலாளிகள் பேரிலும் இருக்கின்றன. திருப்பி வேலைக்கு எடுக்கும்போது, சம்பளத்தோடுதான் எடுக்கவேண்டும் என்று போட்டால், தயவில் வேலைக்கு எடுத்துக் கொள்வதும் போய்விடும். எடுத்துக்கொண்டால், சம்பளம் கொடுக்கவேண்டுமே என்று தயங்குவார்கள். ஆகவேதான் இருக்கும் நிலைமையை ஒட்டி, தவறுகள் யார் பேரில் இருக்கிறது என்பதை ஒட்டி, சம்பளத்துடனோ, காம்பென்ஸேஷன் கொடுத்தோ, ஏதாவது ஒரு முறையில் தொழிலாளிகளுக்கு நன்மை இருக்க வேண்டும் என்று போடப்பட்டிருக்கிறது.

ஆறு மாதத்தை, மூன்று மாதம் என்று போட்டாலும், இதே நிலைமை தான். முதலாளி 2 மாதம், 29 நாட்களில் போகச் சொன்னாலும் சம்பளம் கிடைக்காது. இதனாலெல்லாம், இந்தத் திருத்தங்களை ஏற்றுக் கொள்வதற்கில்லை.

SRI P. S. K. LAKSHMIPATHIRAJ : அமைச்சருக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் சொன்னார்கள், பீடி சுற்றுவதினால், ஆஸ்த்மா, புற்று நோய் முதலியவை ஏற்பட்டு தொழிலாளிகள் கஷ்டப் படுகிறார்கள் என்று . . .

DEPUTY SPEAKER : The hon. Member need not explain all those things. He may please resume his seat.

The amendments were put and lost.

Clause 32 was put and carried.

Clause 33 was put and carried.

*Clause* 34.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 34 do stand part of the Bill."

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"In clause 34, *after* sub-clause (3), *add*—

'(4) It shall be no defence in a prosecution of any person for contravertion of section 3 that any manufacturing process connected with the production of beedies was carried on by such person himself or by any member of his family or by any other person living with, or dependent on, such person. இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்ததற்குக் காரணம், தொழிலாளிகள் வீட்டிலே சுற்றுகிறோம், உறவினர்களைக் கொண்டு செய்கிறோம். ஆகவே இது சட்டத்தின் கீழ் வரவில்லை என்று சொல்லி, சட்டத்தை மீறாமல் இருப்பதற்காகவேதான்'."

The amendment was put and carried.

Clause 34, as amended, was put and carried.

Clause 35 was put and carried.

*Clause* 36.

DEPUTY SPEAKER : The motion is—

' That clause 36 do stand part of the Bill.'

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In sub-clause (1), *after* the words 'on complaint by' *insert* the words "a registered Trade Union."

SRI M. KALYANASUNDARAM : I second the amendment.

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்தத் திருத்தத்தை நான் கொடுத்திருப்பதன் நோக்கம் என்னவென்றால், இந்த ஷரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்னவென்றால் இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவதில் ஏதாவது ஒரு குறிப்பிட்ட ஒரு கட்சியின் மீது யாராவது சட்டத்தை அமுல் நடத்துவதை மீறினால் அதைப்பற்றி கோர்ட்டுக்கு மனுச் செய்துகொள்வதாக இருந்தால் இன்ஸ்பெக்டர் அவர்களுடைய உத்தரவு பெற்று கோர்ட்டுக்கு முன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்று இருக்கிறது. என்னுடைய திருத்தம் என்னவென்றால் ஒரு ரிஜிஸ்டரட் ட்ரேட் யூனிய னுக்கும் இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்து அவர்களுக்கும் கோர்ட்டுக்கு மனுச் செய்துகொள்ளும் உரிமை வேண்டும் என்பதுதான். சில சமயங்களில் இன்ஸ்பெக்டரிடமிருந்து உத்தரவு வருவதற்கு கால தாமதம் ஏற்படலாம். அவரிடமிருந்து பர்மிஷன் வரும் வரையில் காத் திருக்க முடியாத நிலைமை ஏற்படலாம். அப்படி பர்மிஷன் வருவதற்குள் அந்தக் காரியம் முடிந்துவிடும். சில சமயங்களில் பர்மிஷனே வராமல் போய்விடலாம். ஆனால் தொழிற் சங்கம் அதைப்பற்றி உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளும். அதனால்தான் தொழிற் சங்கங் களுக்கு அப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுக்கவேண்டும் என்று இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் சட்டநாதன் அவர்கள் பிரேரேபித்திருக்கும் திருத்தத்தை நான் ஆதரிக்கிறேன். இந்தத் திருத்தத்தை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவாரோ அல்லது மாட்டாரோ அது எனக்குக் கொஞ்சம் சந்தேகமாகத்தான் இருக்கிறது. இந்தப் பிரச்னை இப்பொழுது வந்தது என்பது புதியது அல்ல. ஏற்கெனவே இதைப்பற்றி செலெக்ட் கமிட்டியில் விவாதிக்கப்பட்டது. என்ன காரணத் தினாலோ கனம் அமைச்சர் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. இதில் ஒரு தகராறு ஏற்படலாம். எவ்வளவோ இன்ஸ்பெக்டர்கள் முதலாளிகளுக்கு சாதகமாக இருப்பார்கள். சாதகமாக இல்லாமல் இருக்கக்கூடியவர்களும் இருக்கலாம். முதலாளிகளுக்கு சாதகமாக இருக்கக்கூடிய இன்ஸ்பெக்டர்கள், எவ்வளவோ மாறுபட்டிருந்தாலும், காலம் கடத்துவதனால் கோர்ட்டுக்குப் போகமுடியாமல் போய்விடும். அதைத் தடுப்பதற்குத்தான் கனம் சட்டநாதன் அவர்கள் இந்தத் திருத்தத்தைக் கொண்டுவந்திருக்கிறார். இந்த திருத்தத்தின் நோக்கமும் அதுதான். அதனால் இந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதனால் எந்த விதமான கஷ்டமும் ஏற்பட்டுவிடாது. "ஆர்" என்று தான் போடப்பட்டிருக்கிறது. அதனால் இன்ஸ்பெக்டருக்கும் அந்த அதிகாரம் இருக்கிறது. இதை ஏற்றுக்கொள்வதில் இடையூறு இருந் தாலும் சர்க்காரிடத்தில் ஒன்றை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதாவது இதற்கு விதிகள் பிறப்பிக்கும் காலத்தில் இன்ஸ்பெக்டர்கள் கோர்ட்டுக்கு போகவிடாமல் தடுத்து விட்டால் அதற்குக் காரணம் ஏதாவது

காட்டினால் அதை தொழிற் சங்கத்திற்கு தெரிவித்து அதன் மீது மறுபடியும் லேபர் கமிஷனரிடம் முறையிட்டுக்கொள்வதற்கு சம்பந்தப்பட்ட தொழிற்சங்கத்திற்கு அதிகாரம் இருக்கக்கூடிய அளவில் விதிகளை மாற்றி அமைக்க வேண்டுமென்ற இந்த யோசனையை கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதனால் நியாயமாக நடக்கிற தொழில் சங்கங்கள் உண்மையான கேஸ்களைக்கூட போட முடியாது. சில தொழில் சங்கங்கள் கோபத்தாலோ அல்லது விதண்டாவாதத்தாலோ வேண்டுமென்றே கோர்ட்டுக்கு கேஸ்களைப் போடுவதற்கு சாத்தியமாகிவிடும். அதனால் தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் உள்ள உறவு நிலை சுமுகமாகப் போவதற்கு பதிலாக பெரிய சண்டைகளைக் கிளப்பிவிட்டு சண்டைகள் அதிகமாகப் போய்விடும். அதற்காகத்தான் இன்ஸ்பெக்டர்கள் இப்படிப்பட்ட கேஸ்களைப் போடவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இல்லாவிட்டால் தொழில் சங்கங்கள் சர்க்காருக்கு மனுச் செய்துகொள்ளலாம். ஏற்கெனவே அப்படிப்பட்ட சலுகைகள் இருக்கின்றன. ஏற்கெனவே இண்டஸ்ட்ரியல் டிஸ்பியூட்ஸ் ஆக்ட் பிரகாரம் தொழில் சங்கங்கள் சர்க்காருக்கு மனுச் செய்துகொண்டு வருகிறார்கள். அதன் மேல் சர்க்கார் நடவடிக்கையும் எடுத்துக்கொண்டு வருகிறது. அதைப் போலவேயே இங்கேயும் செய்துகொள்ளலாம். அதனால் இப்படிப்பட்ட திருத்தம் தேவையில்லை என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"In su-clause (1), *after* the words 'on complaint by' *insert* the words 'a registered Trade Union'."

The amendment was put and lost.

Clause 36 was put and carried.

Clauses 37, 38 and 39 were put and carried.

*Clause* 40.

DEPUTY SPEAKER : The motion is—

'That clause 40 do stand part of the Bill.'

* SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"*Omit* sub-clause (*d*) and (*b*)."

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் நேற்றும் குறிப்பிட்டேன். பொதுவாக விதிவிலக்குக் கொடுக்கும்போது குறிப்பாக ஒரு பீடி பிரெமிஸெஸ்ஸுக்கோ அல்லது குறிப்பிட்ட பீடி தொழில் நிலயத்திற்கோ எதிர்பாராத விதமாகவோ அல்லது இயற்கைக் கோளாறினாலோ ஏதாவது நிகழ்ச்சிகள் ஏற்பட்டால் அவைகளுக்கு விதிவிலக்குக் கொடுக்கப்படும் என்றும் அப்பொழுதுதான் இது பிரயோகப்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அசாதாரணமாக நிகழக்கூடிய சந்தர்ப்பங்களில் பல சட்டங்களுக்கு இப்படிப்பட்ட விதிவிலக்கு கொடுக்கவேண்டியதாக இருக்கும். அதனால் முன் கூட்டியே இந்தச் சட்டத்தில் விதி விலக்கு கொடுப்பது என்பது அவ்வளவு உசிதம் அல்ல. நடைமுறையில் இதை வைத்துக்கொண்டு இதன் மூலம் சட்டத்தை துர்விநியோகம் செய்வதற்கு இடம் கொடுக்கக்கூடாது. ஏதாவது எக்ஸெம்ப்ஷன் கொடுக்கவேண்டுமென்றால் "as they may impose"

என்று இருப்பதற்கு பதிலாக "as may be imposed by the Legislature" என்று திருத்தி, லெஜிஸ்லேச்சர் செய்யக்கூடிய முறையில் இருந்தால் மாத்திரம் போதும். எதிர்பாராத காரணங்களால் சட்டத்திலிருந்து விதி விலக்கு கொடுக்கவேண்டுமென்பது அசாதாரணமான சந்தர்ப்பங்களில் நிகழக்கூடியது. அது மாத்திரம் அல்ல, பல்வேறு சட்டங்களிலிருந்து அந்தச் சந்தர்ப்பத்தில் விதி விலக்கு கொடுக்க வேண்டியதாகவும் இருக்கும் என்று கூறிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

* **SRI N. K. PALANISAMI :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, ஏற்கெனவே நாம் ஷாப்ஸ் அண்ட் எஸ்டாபிளிஷ்மெண்ட் ஆக்டுக்கு பல எக்ஸெம்ப்ஷன் கொடுத்து அந்தச் சட்டமே உறுப்படி இல்லாமல் போய் விட்டது. அப்படி எக்ஸெம்ப்ஷன் கொடுப்பதாக இருந்தால் வேறு கம்பெனி களுக்குக் கொடுக்கலாம். வேறு பீடி தொழில் ப்ரெமிஸஃக்கோ அல்லது பீடி தொழிலாளர்களுக்கோ கொடுக்கக்கூடாது என்று சொல்லிக் கொண்டு சர்க்காரால் போடப்படக்கூடிய சில கண்டிஷன்களுக்கு மட்டில் அப்படி விதிவிலக்குக் கொடுக்கலாம். அந்தமுறையில் இதைத் திருத்தி கொள்ளவேண்டும்.

**SRI M. KALYANASUNDARAM :** கனம் சபா நாயகர் அவர்களே, சாதாரணமாக விதிவிலக்கு கொடுக்க வேண்டிய அவசியமே ஏற்படாது. சில சமயத்தில் ஏற்படலாம். அந்த மாதிரி சமயம் ஏற்படக்கூடிய சமயத்தில் அதை பிரயோகிப்பதற்கு சர்க்காருக்கு அதிகாரம் இருக்க வேண்டியது அவசியம்தான்; அதை ஏற்றுக்கொள்ளுகிறேன். அதே சமயத்தில் இந்த அதிகாரத்தைப் பிரயோகிக்கும் சமயத்தில் தொழிலாளர்களுடைய பிரதிநிதிகளுடைய அபிப்பிராயத்தையும் கேட்டுக் கொண்டு அதை உபயோகப்படுத்த வேண்டும். தொழிற் சங்கங்களின் சம்மதம் இல்லாமல் அப்படிச் செய்யக்கூடாது என்பதை நான் சொல்லிக் கொள்ளுகிறேன். ஒரு அட்வைசரி கமிட்டியைப் போட்டு, தொழிலாளர் களுடைய பிரதிநிதிகளைக்கொண்ட ஒரு கமிட்டியைப் போட்டு அல்லது லேபர் அட்வைசரி கமிட்டி இருக்கிறது, அவைகளின் ஆலோசனையை கேட்டு அதன்பிறகு விதிவிலக்கு கொடுக்கவேண்டும். அத்துடன் விதி விலக்கு உத்தரவை சபையின் முன் வைக்கவேண்டும். அதற்கு வேண்டிய ப்ரொவிஷன் இல்லாமல் இருக்கிறது. ஆகவே சபையின் முன் கொண்டுவரவேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன்.

* **THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, ரெசிடுவரி பவர் என்று சொல்வது, அதாவது சாதாரணமாக நாம் எதிர்பாராத நிலைமை ஏதாவது ஏற்பட்டால் [அதற்காக சர்க்கார் அதிகாரம் கேட்கிறது என்பதுதான் இந்த ஷரத்து அதன்படி திடீரென்று ஏதாவது நிகழ்ச்சி ஏற்பட்டால் அப்பொழுது வேலையே நடக்காமல் போய்விடும். அப்படிப் போகாமல் இருப்பதற்காகத்தான், வேலை நிற்காமல் நடப்பதற்குத்தான் இந்த ஷரத்து கொடுக்கப்பட்டிருக்கிறது. கனம் கல்யாணசுந்தரம் அவர்கள், இது விஷயமாக விதி விலக்குக் கொடுக்கும்போது தொழிலாளர்களுடைய பிரதி நிதிகளைக் கலந்து ஆலோசித்துக் கொடுக்கவேண்டும் என்று சொன்னார். அவருக்கு நான் சொல்லுகிறேன், இப்பொழுது ஷாப் சட்டத்தின்கீழ் விதிவிலக்குக் கொடுக்கிறோம். அப்பொழுது அவர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கிறோம். அதேபோல் ப்ராவிடெண்ட் பண்ட் சட்டத்தின்படியும் விதிவிலக்குக் கொடுக்கும்போது நோட்டீஸ் கொடுக்கச்சொல்லி ஏற்பாடு செய்திருக்கிறோம். இப்படிப்பட்ட நிலைமை ஏற்படும்போதெல்லாம் நோட்டீஸ் கொடுத்துக்கொண்டுதான் வருகிறோம். அந்த முறையே இதிலும் கையாளப்படும் என்பதை கனம் அங்கத்தினருக்கு உறுதி யாகச் சொல்லுகிறேன். அதனால் இந்தத் திருத்தம் தேவையில்லை என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 40 was put and carried.

13th September 1958]

*Clause* 41.

DEPUTY SPEAKER : The motion is—

'That clause 41 do stand part of the Bill.'

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move--

" In clause 41, in sub-clause (2), in item (*a*), *after* the words 'a licence may be granted', *insert* the words 'or renewed'."

DEPUTY SPEAKER : The question is :

" In clause 41, in sub-clause (2), in item (*a*), *after* the words 'a licence may be granted,' *insert* the words 'or renewed'."

The amendment was put and carried.

Clause 41, as amended, was put and carried.

DEPUTY SPEAKER : Mr. V. K. Kothandaraman has given notice of an amendment for the inclusion of a new clause 41-A.

* THE HON. SRI R. VENKATARAMAN : ஸார், இந்தத் திருத்தமானது இப்பொழுதிருக்கும் சட்டத்தின்படி அவசியம் இல்லே. ஏனென்ருல் சாதாரணமாக தொழில் தகராறு சட்டம் இதற்கு 'அப்ளே' ஆகும் என்பது தான் கருத்து. இருந்தாலும் சந்தேகத்தைப் போக்குவதற்காக நான் அந்தத் திருத்தத்தை வேறு முறையில் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். But this amendment should come at some appropriate place before clause 41 because the last clause always relates to the making of rules under the Act. I move—

*Add* the following as a new clause :—

" The provisions of the Industrial Disputes Act, 1947, shall apply to matters arising in respect of all beedi industrial premises."

DEPUTY SPEAKER : The question is—

*Add* the following as a new clause :

" The provisions of the Industrial Disputes Act, 1947, shall apply to maters arising in respect of all beedi industrial premises."

The amendment was put and carried.

*Clause* 1.

SRI N. K. PALANISAMI : I move—

" *For* sub-clause (3), *substitute* the following—

'(3) It shall come into force at once'."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In sub-clause (3) *for* the words 'on such date as the Government may, by notification, appoint', *substitute* the words 'at once'."

The amendment was duly seconded.

12–20 p.m. * SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, என்னுடைய திருத்தம் "இட் ஷல் கம் இண்டு போர்ஸ் அட் ஒன்ஸ்" என்பது. பாக்டரி சட்டம், பேமெண்ட் ஆப் வேஜஸ் ஆக்ட், மினிமம் வேஜஸ் ஆக்ட் இவைகளிலிருந்து தப்பித்துக்கொள் வதற்காகவும், பாக்டரி சட்டத்தை நடைமுறையில் உடைப்பதற்காகவும், ப்ராஞ்சுகள் ஏற்படுத்திக்கொள்ளப்பட்டன. ஒட்டல் சட்டம் நிறை வேற்றப்பட்டு ஆறு மாதம் ஆகியும் இன்னும் நடைமுறைக்கு வராமல் இருக்கிறது. அது எப்பொழுது நடைமுறைக்கு வரும் என்று தெரிய வில்லை. அதுபோல், இந்தச் சட்டத்தையும் எத்தனை காலம் வேண்டு மானாலும் அமுல் செய்யாமல் இருக்கலாம்.

ஆகையால் நான் ஏற்கெனவே குறிப்பிட்டபடி, இத்தனை நாட்களுக்குள் இந்த இந்த கண்டிஷன்களை நிறைவேற்றியாகவேண்டும் என்ற வரையறை இருக்க வேண்டும். குறிப்பிட்ட கண்டிஷன்களை நிறைவேற்றும் வரை, டெம்பரரி லைஸென்ஸ் மட்டுமே கொடுத்து, அவைகளை பூர்த்தி செய்தபின் லைஸென்ஸை நிரந்தரமாகக் கொடுப்பதற்கான முறையிலே செய்ய வேண்டும். ஏனென்றால், இம் மாதிரியான நல்ல சட்டம் ஏற்படுத்தியும், அதை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவராவிட்டால் அவ்வளவு நன்றாக இருக்காது. எல்லா ஷரத்துக்களையும் நன்றாகப் போட்டுவிட்டு, அவைகளில் ஒன்றையும் அமுலுக்குக் கொண்டுவரவில்லையென்றால், சட்டம் செய்து என்ன பிரயோஜனம்? குறிப்பிட்ட சில அம்சங்களையாவது உடனடியாக அவர்கள் எடுத்துக்கொள்ளவேண்டும். சம்பளத்துடன் விடுமுறை, குறைந்தபட்ச சம்பளம் போன்றவை சம்பந்தமாக உடனடியாக அமுல் செய்யக்கூடிய முறையில் இந்தச் சட்டம் திருத்தப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தை உடனடியாக அமுலில் கொண்டுவரவேண்டும் என்று நான் சொல்லக்கூடிய இதே நேரத்தில், ஒரு கருத்தைத் தெரிவித் துக்கொள்ளுகிறேன். இரண்டு நாட்களாக இந்தச் சட்டத்தின்மீது விவாதம் செய்ததிலே, இத் தொழிலை நடத்தக்கூடியவர்களுக்குப் பல விஷயங்களில் கஷ்டங்கள் ஏற்படும் என்கிற ஒரு நிலைமையை எடுத்துக் காட்டினார்கள். அமைச்சர் அவர்கள் அந்தக் காரணத்தினால்தான் எந்த எந்தப் பிரச்னைகளை எப்பொழுது எப்பொழுது எடுத்துக்கொள்ளலாம், என்பதையெல்லாம் நன்றாக யோசித்துக்கொண்டுவருவோம் என்று சொன்னார் என்பது மட்டும் அல்ல. இந்தச் சட்டத்திலேகூட, "date", "area", "provision" என்ற வார்த்தைகள் இருக்கின்றன. இதைப் பார்க்கும்போது கொஞ்சம் அஞ்சவேண்டியதாகத்தான் இருக்கிறது. இதை ஜில்லாவாரியாக அமுலுக்குக் கொண்டுவரக்கூடிய நிலைமை ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஏரியா என்று சொல்லக்கூடிய நேரத்தில் திருநெல்வேலி, திருச்சி, வட ஆற்காடு என்று ஒவ்வொரு ஜில்லாவாகச் சொன்னாலும் சொல்லலாம். இப்படி பிரதேசவாரியாக அமுலுக்குக் கொண்டுவருவதனால் தொழி லாளர்களுக்குத்தான் பாதகம் ஏற்படும். ஆதலால் இன்றைய தினம் இதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. எப்பொழுதெல்லாம் எதைக் கொண்டுவரவேண்டுமோ அதைக் கொண்டுவரலாம் என்று அமைச்சர் அவர்கள் சொல்லக்கூடிய நேரத்தில் எவ்வளவு சீக்கிரத்தில் அவற்றை யெல்லாம் கொண்டுவர முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் கொண்டுவர வேண்டும் என்பது மட்டுமல்ல. குறிப்பிட்ட எந்த ஏரியாவில் இதைக் கொண்டுவருவதாக இருந்தாலும் ராஜ்யம் பூராவுக்கும் கொண்டுவரக் கூடியதாக இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

13th September 1958]

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் பொது விவாதத்தின்போது என் இந்த ஷரத்துப் போடவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி விளக்கமாகச் சொன்னேன். இன்றைக்கு எல்லா விதிகளையும் உடனடியாக அமுல் செய்ய வேண்டுமென்று சொன்னால் அது முடியாத காரியம். பல ஷரத்துக்கள் உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர முடியாமல் இருக்கிறது. அமுலாக்குவதற்கு அவகாசம் வேண்டுமென்பதற்காகத்தான் சர்க்கார் இந்த அதிகாரத்தைக் எடுத்துக்கொண்டிருக்கிறது. ஹோட்டல் தொழிலாளர் சட்டம் கொண்டு வந்தபோது தான் தாமதமாகச் செய்தார்கள் என்று சொன்னார்கள். மத்திய சர்க்காருடைய அனுமதியைப் பெறவேண்டியிருந்தது. அவர்களும் இதை ஒப்புக்கொண்ட பிறகுதான் கெஜட் நோட்டிபிகேஷன் செய்ய வேண்டும். அதற்கு இரண்டு மூன்று மாதம் ஆகிறது. ஏதோ தாமதப்படுத்த வேண்டும் என்று செய்ததாகச் சொல்வது சரியல்ல என்று தெரிவித்துக்கொள்கிறேன். சட்டம் வேண்டுமென்று நிச்சயமாக எல்லோருக்கும் ஆர்வம் இருக்கிறது. ஏட்டளவில் சட்டத்தை வைத்துவிட்டு நடைமுறையில் பயன் ஏற்படாத அளவில் விடலாமா என்று பழனிசாமி அவர்கள் சொன்னார்கள். அதற்கெல்லாம் இடம் கொடுக்காத அளவில் இந்தச்சட்டத்தின் எல்லா ஷரத்துக்களையும் அமுல் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் இந்த அதிகாரம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அதனால்தான் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

DEPUTY SPEAKER : The question is—

"*For* sub-clause (3), *substitute* the following :—

'(3) It shall come into force at once.' "

The amendment was put and lost.

DEPUTY SPEAKER : The question is :

"In sub-clause (3) for the words 'on such date as the Government may, by notification, appoint', *substitute* the words 'at once'."

The amendment was put and lost.

Clause 1 and the preamble were put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, in view of the deletion of clause 22 and the insertion of a new clause, I move— 1-40 p.m.

'Clause 23 and the rest of the clauses be re-numbered and consequential amendments carried out.'

DEPUTY SPEAKER : The question is—

'Clause 23 and the rest of the clause be re-numbered and consequential amendments carried out.'

The motion was put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958, (L.A. Bill No. 18 of 1958) as amended be passed.'

[13th September 1958

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958 (L.A. Bill No. 18 of 1958), as amended be passed.'

SRI M. KALYANASUNDARAM : இந்த மசோதா நிறைவேற்றப்பட்டுவிட்டது. இந்த மசோதாவின் நோக்கத்தைப்பற்றி நாம் எல்லோரும் திருப்தி அடையலாம். ஆனால் நடைமுறைக்கு வரக்கூடிய காலத்தில் இதன் நோக்கம் எல்லாம் பூர்ணமாக நிறைவேற்றப்பட வேண்டும். இன்றைக்கு இருக்கும் நிலைமையில், இந்த மசோதாவினால் பூர்ண அபிவிருத்தி ஏற்பட்டுவிடும் என்கிற நம்பிக்கை எனக்கு ஏற்படவில்லை. இப்பொழுதே அதைத் துரிதமாக நிறைவேற்றியிருக்கலாம்.. மத்திய சர்க்காரிடத்தில் முறையிட்டு ஜனாதிபதியின் சம்மதத்தைப் பெற்று விதிகளைப் பிறப்பித்து அமுலுக்குக் கொண்டு வருவதில் பல சிக்கள் உண்டாகும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

(Mr. Speaker in the Chair.)

அதோடு இன்னொரு விஷயம். சாதாரண முதலாளிகளின் தன்மை வேறு. பீடித் தொழிலே இன்றைய தினம் நடத்துகிற முதலாளிகளின் தன்மை வேறு. எப்படிச் சட்டத்தை ஏமாற்றி தங்களுக்குப் பாதகமாகாத வகையில் சட்டத்தின் சந்து பொந்துகளை உபயோகித்துக் கொள்ளலாம் என்பதில் நல்ல அநுபவமும், திறமையும் உடையவர்கள் அவர்கள். அதிலும் இந்தத் தொழிலின் தன்மை இந்த மாதிரியாக இருக்கிறது. அதனால்தான் மூன்று வருஷ காலமாக இந்தத் தொழிலாளர்களுக்கு எந்தவிதமான பாதுகாப்பும் கொடுக்க முடியாமல் போய்விட்டது. சர்க்கார் எந்தவிதமான உத்தரவைப் பிறப்பித்தாலும்கூட கோர்ட்டுகளுக்குச் சென்று உத்தரவை ரத்துபண்ணிவிடுகிறார்கள். சட்டத்தின் நோக்கம் நிறைவேற்றப்படுகிறதா என்பதைவிட சட்டத்தில் எப்படிக் கோளாறைக் கண்டுபிடிப்பது, அந்தச் சட்டத்தை எப்படி உடைத்து எறிவது என்பதைத் தான் கவனிக்கிறார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால் நாம் இங்கே நல்லதொரு சட்டத்தை நிறைவேற்றிவிட்டால் மட்டும் போதாது. அதன் பலன் தொழிலாளர்களுக்குக் கிடைக்கவேண்டுமானால் இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவதில் நல்ல கவனம் செலுத்த வேண்டும். அதுவும் தொழில் அமைச்சர் அவர்கள் போலீஸ்காரர்கள் இவ்விஷயத்தில் தலையிடாமல் நடுநிலைமை வகிக்கும் படியாகச் செய்ய வேண்டும். போலீஸ்காரர்கள் அக்கிரமாக நடக்கிற தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பாகவும் இருக்கவேண்டாம். முதலாளிகளுக்குப் பாதுகாப்பாகவும் இருக்கவேண்டாம். சாத்வீகமான முறையில் நடத்தப்படுகிற தங்கள் உரிமைப் போராட்டங்களை முதலாளிகள் போலீஸ்காரர்களின் துணைகொண்டு உடைத்தெறிய முடியாது போலீஸ்காரர்கள் நடுநிலைமைதான் வகிப்பார்கள் என்கிற உத்திரவாதம் இருந்தால் போதும். தொழிலாளர்கள் தங்கள் உரிமைகளைப் பெறுவார்கள். "இந்து" பத்திரிகை விஷயத்தில் காட்டிய . . .

MR. SPEAKER : The hon. Member is bringing something which is not relevant to the discussion. Why should be bring in the name of 'The Hindu' in this Bill? I think it is quite out of order.

SRI M. KALYANASUNDARAM : 1944-ம் வருஷத்தில் தொழில் தகராறுகளில் போலீஸ்காரர்கள் தலையிடுவது கிடையாது என்று முடிவு செய்யப்பட்டிருந்தும் இதுவரையில் போலீஸ் அமைச்சர் அவர்கள் அதை மறந்திருக்கலாம். இனி தொழில்கள் சம்பந்தமான விஷயத்தில் போலீஸ்காரர்கள் நடுநிலைமை வகிக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். "இந்து" பத்திரிக்கை விஷயத்தில் சர்க்கார் எடுத்துக்கொண்டுள்ள முடிவைப் பாராட்டுகிறேன்.

அடுத்தபடியாக இந்தச் சட்டம் அமுலாக்கப்பட்டு தொழிலாளர்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்படுவதோடுகூட, தொழிலும் பாதுகாக்கப் படுவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டுவிட்டால் மட்டும் தொழிலாளர்களுக்கு சம்பளம் உயர்ந்து விடாது. உடனடியாக எல்லா நடவடிக்கைகளையும் சர்க்கார்தான் எடுக்க வேண்டும். கேரள ராஜ்யத்தில் சம்பளம் உயர்த்தப்படவில்லை என்பதாகச் சொன்னார்கள். கேரளாவில் உயர்த்தப் பட்டிருக்கிறது. அங்கே உயர்த்தப் பட்டிருந்தாலும் நம் ராஜ்யத்தில் உயர்த்தப்படாததன் காரணமாக இந்த ராஜ்யத்தின் எல்லைப்புறத்திற்கு பாக்டரிகளை மாற்றி வைத்துக்கொண்டு, இங்கே உற்பத்தி செய்து அங்கே அனுப்பி வருகிறார்கள். எல்லா ராஜ்யங்களிலும் சேர்ந்தார்போல் உயர்த்தினால்தான் நல்ல பலன் அளிக்கும். அதற்கு இந்திய சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

குறைந்தபட்ச கூலியை நிர்ணயித்துவிட்டால் மட்டும் போதாது. அதற்கு வேண்டிய இலை, தூள் முதலியவை பற்றியும் கவனம் செலுத்த வேண்டும். இலை மூலமாகச் சுரண்டல் நடைபெறுகிறது. இலையை பெரிய முதலாளிகள் சேகரித்து வைத்துக்கொண்டு சிறு முதலாளிகளைச் சுரண்டு கிறார்கள். இலை, தூள் முதலியவற்றையெல்லாம் கூட்டுறவு சொஸைடி மூலம் சப்ளை செய்ய வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். காட்டு இலாகாவும் தீவிரமான ஆராய்ச்சி செய்து இலை முதலியவற்றை யெல்லாம் வளர்ப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும். இப்போது தனி முதலாளிகளுக்குத்தான் அதிக லாபம் போய்ச் சேருகிறது. இரண்டு கணக்குகள் வைத்துக்கொள்வதில் பீடி முதலாளிகள் ரொம்ப கெட்டிக்காரர்கள்: இந்த விஷயத்தில் இவர்கள் பஸ் முதலாளிகளுக்கு அடுத்தபடியாக—ஏன், அவர்களுக்கும் மேலாகக்கூட—இருக்கிறார்கள். இரண்டு கணக்குகள் வைத்துக்கொள்ளாத பீடி முதலாளியே இல்லை. அவ்வாறு கணக்குகள் வைத்துக்கொண்டால் விற்பனை வரியிலிருந்தும் தப்பித்துக்கொள்ளலாம், வருமான வரியிலிருந்தும் தப்பித்துக் கொள்ளலாம். இவ்வாறு செய்து அவர்கள் பெரும் லாபம் சம்பாதிக் கிறார்கள். இன்று சிறிய முதலாளிகள் கஷ்டப்பட்டாலும் பெரிய முதலாளிகள் மிகவும் நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். பெரிய பீடி முதலாளிகள் மாடிக்கு மேல் மாடி கட்டிக்கொண்டு போகிறார்கள். கார்களுக்கு மேல் கார்கள் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள்-ஸ்டுடிபேக்கர் கார்களும், ப்ளிமத் கார்களும் வைத்துக்கொண்டு ஆனந்த வாழ்க்கை நடத்துகிறார்கள். அந்த நிலைமையில் இருக்கும் பெரிய முதலாளிகள் தொழிலாளர்களை மிகவும் மோசமான நிலையில் வைத்திருக்கிறார்கள். ஆகவே பீடித் தொழிலாளர்களை நல்ல நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு உறுதியான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன். 12-40 p.m.

**Sri A. MARIAPPAN :** கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு தகவல் அறியும் பிரச்னை. கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் போலீசார் முதலாளிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கக்கூடாது என்று சொன்னார். அப்படி யானால், அவர் பலாத்காரத்திலேயே நம்பிக்கை வைத்திருக்கிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர்களே, பாவம், நான் கூறியதில் ஒரு விஷயத்தை மட்டும்தான் கனம் அங்கத்தினர் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் முதலிய நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போது பலாத் காரத்தைக் கடைபிடித்தால் முதலாளிகளுக்கு போலீசார் பாதுகாப்புக் கொடுக்க வேண்டுமென்றும், ஆனால் பலாத்காரம் தலையெடுக்கும் வரையில் போலீசார் யாருக்கும் பாதுகாப்புக் கொடுக்கக்கூடாது என்றும், அந்தக் காலத்தில் ஒழுங்கையும் அமைதியையும் பாதுகாப்பது மட்டும்தான் அவர் களுடைய கடமை என்றும் நான் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன்.

**Sri M. P. SARATHI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாவது குறித்து நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். ஆனால் இந்த மசோதா சட்டமானவுடன் 14 வயதுக்குக் கீழுள்ள பல்லாயிரக்கணக்கான சிறுவர்களும் சிறுமிகளும் வேலை இழப்பார்கள். அவர்களுக்கு சர்க்கார் என்ன செய்யப் போகிறார்கள் ? அவர்களுக்கு ஏதாவது தொழில் கல்விக்கு ஜில்லாவாரியாக வகை செய்ய வேண்டும். மேலும் கோஷாப் பெண்கள் உடனடியாக இந்தத் தொழிலிலிருந்து விலக நேரிடும். பீடித் தொழிலையே நம்பி ஜீவனம் நடத்தும் கோஷாப் பெண்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுடைய பிழைப்பிற்கு வழி காண வேண்டும். அத்துடன், பல தொழிலாளர்களுடைய குடும்பங்களிலுள்ள பெண்களும் சிறுவர்களும் இந்தத் தொழிலிலிருந்து நீங்குவதால் அந்தக் குடும்பங்களுக்கு ஏற்படும் கஷ்டத்தை தவிர்ப்பதற்காக அவர்களுடைய கூலியை உயர்த்த வேண்டும். இந்த விஷயத்தில் கூலி நிர்ணயக் கமிட்டியில் கவனம் செலுத்த வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். பீடிக்கு லேபல் ஒட்டியே பிழைக்கும் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் இந்த மாநிலத்தில் இருக்கிறார்கள். அவர்களுடைய பிழைப்பிற்கும் வழி காண வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். இந்த மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றுவதற்காக கனம் அமைச்சருக்கு என் நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது பீடித் தொழிலாளர் மசோதா சட்டமாக நிறைவேறவிருக்கிறது. இந்த மசோதாவைக் கொண்டுவந்து இதைச் சட்டமாக நிறைவேற்றுவதற்குரிய காரியங்களை செய்வதற்காக கனம் தொழில் அமைச்சரை நான் மனமாரப் பாராட்டுகிறேன். இவ்வாறு நான் அவரைப் பாராட்டுகிறேன் என்று சொன்னவுடன், அவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருக்கிறாரோ அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கு அந்தப் பாராட்டு கிடைத்து விட்டதென்று நினைத்து தங்கள் தலையைத் தொட்டுப்பார்த்துக்கொள்ளக்கூடாது. ஏனென்றால், கனம் அமைச்சரை நான் பாராட்டுகிறேன் என்று சொன்னால், அவரை தனியாகத்தான் பாராட்டுகிறேனே தவிர, அவரை அவருடைய கட்சியுடன் சேர்த்துப் பாராட்டவில்லை ; அவருடைய கட்சியையும் நான் பாராட்டவில்லை. கனம் தொழில் அமைச்சர் பதவிக்கு வந்த பிறகு, இதற்குள், இந்தக் குறுகிய காலத்திற்குள், தொழிலாளர்கள் நலன்களைக் காப்பதற்குரிய பல மசோதாக்களை ஒன்றன் பின் ஒன்றாகக் கொண்டுவந்திருக்கிறார். அவைகளாலேயே தொழிலாளர்கள் நலன்களை பூரணமாகக் காப்பாற்றிவிட முடியாது என்பது கனம் அமைச்சருக்கே தெரியும். ஆனால் அவரால் இவ்வளவுதான் செய்ய முடியும் என்று நான் நினைக்கிறேன். இவைகளையாவது, இதுவரை செய்யப்படாமல் இருக்கும் நன்மைகளையாவது, செய்யலாம் என்று கருதி கனம் அமைச்சர் இவைகளைச் செய்கிறார் என்று நினைக்கிறேன். தொழிலாளர்களுக்காக அவர் இவ்வளவு மசோதாக்களைக் கொண்டுவந்து நிறைவேற்றும்போது, அவர் காங்கிரஸ்காரர் என்பதற்காக அவரை பாராட்டாமல் இருக்க என்னால் முடியவில்லை. அதனால், நான் மீண்டும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அவர் எப்படி இருந்தாலும், அவர் கொண்டுவந்திருக்கும் மசோதா நல்ல மசோதா என்பதாலும், அவருடைய நோக்கம் மிகவும் நல்ல நோக்கம் என்பதாலும் அவரைப் பாராட்ட நான் விரும்புகிறேன். பீஷ்மர் எங்கே இருந்தபோதிலும் அவருடைய நல்ல செயல்களை பாண்டவர்கள்கூட பாராட்டத்தான் செய்தார்கள். பீஷ்மர் கடைசி வரையில் கௌரவர்களுக்காகப் போராடியிருந்தாலும் அவருடைய நல்ல செயல்களைப் பாண்டவர்கள் பாராட்ட தவறியதில்லை. ஆகவே அந்த மனப்பான்மையுடன்தான் கனம் தொழில் அமைச்சரின் நல்ல செயல்களை நான் பாராட்டுகிறேன். கனம் அமைச்சர் அவருக்குரிய நல்ல முறையில் தொழில் தகராறுகளை கவனித்து வருகிறார் என்பதால், அதை விரும்பாத சில

13th September 1958] [Sri P. S. Chinnadurai]

அக்கறையுள்ள பத்திரிகைக்காரர்கள் அவர் பேரில் துவேஷம்கொண்டு அவரைப்பற்றி தவறாகப் பிரசாரம் செய்துவருகிறார்கள். இப்படிப்பட்ட நிலைமையில் இந்த மசோதா உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டும். இது உடனடியாக நிறைவேற்றப்படுவது மட்டுமின்றி, உடனடியாக அமல் நடத்தப்படவும் வேண்டும். கனம் தோழர்கள் ஸ்ரீ கோதண்டராமனும், ஸ்ரீ பழனிசாமியும் அந்த நோக்கத்துடன்தான் தங்கள் திருத்தங்களைக் கொடுத்திருந்தார்கள். இந்த மசோதா சட்டமாக்கப்பட்டு உடனடியாக அமல் நடத்தப்படாது போனால், நாளாவட்டத்தில், தொழிலாளர்கள் சட்டத்தினால் ஒருவிதமான பலனும் அடைய முடியாது போய்விடுமோ என்ற ஐயப்பாட்டினால்தான் அவர்கள் தங்கள் திருத்தங்களைக் கொடுத்திருந்தார்கள். இந்த ஐயப்பாட்டிற்கு அவசியமில்லை என்று கனம் அமைச்சர் சொன்னாலும், எனக்கெல்லாம் இந்த ஐயப்பாடு இன்னும் நீங்கியபாடில்லை. இயற்றும் சட்டத்தை, உடனடியாக தம் பதவிக் காலத்திலேயே கனம் அமைச்சர் அமல் நடத்த வேண்டும். இந்த இலாகாவில் வரும் தொல்லைகளைக் கண்டு இந்த இலாகாவை விட்டுப் போய் விடலாம் என்று கனம் அமைச்சர் எண்ணக்கூடும். அத்தகைய எண்ணங்கள் அவரை வெற்றிகொள்ளும் முன்பே அவர் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்துவிட வேண்டுமென்று நான் மனமார விரும்புகிறேன். அவர் இந்த இலாகாவைத் துறக்கக்கூடிய சூழ்நிலைகள் தோற்றுவிக்கப்பட்டாலும், அவைகளுக்குப் பணியாமல் மிகவும் தைரியமாகவும் துணிச்சலாகவும் இருந்து தொழிலாளர்கள் நலன்களைக் காப்பதற்கான நடவடிக்கைகளையெல்லாம் எடுக்க வேண்டும் என்று அவரை மிகவும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடு இந்த மசோதா நிறைவேறுவதற்கு என் சம்மதத்தையும் தெரிவிக்க விரும்புகிறேன்.

*SRI K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்படவிருக்கும்போது ஒரு சில விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். குடிசைத் தொழிலாக இருக்கும் இந்தத் தொழிலைப் பாக்டரிச் சட்டத்தின் கீழ் கொண்டுவருவதற்கான சட்டமிது. இதனால் பல தொல்லைகள் வரும் என்று இந்த சபையில் தெரிவிக்கப்பட்டது. அவ்வாறு செய்தால் பல புதிய பிரச்னைகள் எழக்கூடும் என்றும் இந்த மசோதா சட்டமாக்கப்பட்டு அமலுக்கு வந்தவுடன், இந்த ராஜ்யத்தில் எல்லைப் பிரதேசங்களில் இருக்கும் முதலாளிகள் கேரளத்திற்குச் சென்று அங்கே வியாபாரம் நடத்துவார்கள் என்று சிலர் ஐயப்பட்டார்கள். அந்த ஐயப்பாட்டிற்கே இடமில்லை. ஏனென்றால், இந்தத் தொழிலில் கேரளத்திற்கும் இந்த மாநிலத்திற்கும் அதிக வித்தியாசங்கள் இருக்கின்றன. கேரளத்தில் இந்தத் தொழில் நடக்கும் முறைக்கும் இந்த மாநிலத்தில் இந்தத் தொழில் நடக்கும் முறைக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஒரு வேளை மலபார் ஜில்லாவில் மாத்திரம், சென்னை மாநிலத்தில் நடக்கும் முறையிலேயே இந்தத் தொழில் நடக்கலாம். ஆனால், திருவாங்கூர், கொல்லம் முதலிய ஜில்லாக்களில் அவ்வாறு இல்லை. அங்கே சாதாரணமாக ஷர்பத் கடை போன்ற சிறு கடைகளில் அந்தக் கடைகளிலுள்ள வியாபாரிகளே பீடி சுற்றுகிறார்கள். அவர்களே இந்தத் தொழிலை நடத்துகிறார்கள். குறைந்தபட்சக்கூலி நிர்ணயச் சட்டம் கூட திருவாங்கூரில் இந்த இரண்டு ஜில்லாக்களிலும் அமலுக்குக் கொண்டுவரப்படவில்லை.

அந்தத் தொழிலை ஒரு குடிசைத் தொழில் என்று கூடச் சொல்ல 12-50 p.m.
முடியாது. பங்குக்கு பங்கு தனிப்பட்ட முறையில் இந்தத் தொழில் நடந்து கொண்டிருக்கிறது. அடுத்தபடியாக, நம் மாகாணத்தில் இருந்து பெரும் பகுதி, அதுவும் திருநெல்வேலியில் செய்யக்கூடிய பீடிகளில் முக்கால் பங்கும் சிலோனிற்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. சிலோன் சர்க்கார் இதற்கு சில கட்டுப்பாடுகள் விதித்துள்ளார்கள். சிலோனிற்கு இதை ஏற்றுமதி செய்வதில், சிலோன் சர்க்கார் அதற்கு லைசென்ஸ் கொடுப்பதை குறைத்துக் கொண்டு வருகிறார்கள். ஆகவே சில வருடங்களில் இங்கிருந்து அங்கு பீடி அனுப்பமுடியாது நின்றுவிடக்கூடும்.

இந்த சூழ்நிலைக்கும் இந்தச் சட்டத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அதற்காக இங்கு நம் மாகாணத்தில் இருக்கக்கூடிய முதலாளிகள் அங்கு சென்று அங்குள்ள மக்களையும் பங்குதாரர்களாகச் சேர்த்துக் கொண்டு புதிய கம்பனிகள் அங்கு ஆரம்பித்துக் கொண்டிருக்கிறார்கள். கூடிய சீக்கிரத்தில் நம் மாகாணத்தில் இருந்து சிலோனுக்கு பீடி ஏற்றுமதி செய்வது என்பது, இச்சட்டம் வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, நின்று விடும். ஆதலால் பெருமளவு இந்தச் சட்டத்தால் இந்தத் தொழில் பாதிக்கப்பட்டுவிடாது. இந்தச்சட்டத்தை அமுல் நடத்துவதில் பல சிக்கல்கள் வந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் இந்தச் சட்டத்தை திட்டவட்டமாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். அப்படி இதை அமுலுக்குக் கொண்டு வரும்போது அதை மிகக் கவனமாகக் கொண்டுவர வேண்டும் ஆனால் அதற்காக அப்படி அமுலுக்கு கொண்டு வருவதில் காலம் தாழ்த்தக் கூடாதென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். அதோடு, குறைந்த பட்ச கூலியையும் எவ்வளவு துரிதமாகக் கொண்டுவர முடியுமோ அவ்வளவு துரிதமாகக் கொண்டுவர வேண்டும். அப்படிக் கொண்டுவந்தால்தான் இந்தச் சட்டம் தொழிலாளிகளுக்கு உற்சாகம் அளிக்கக்கூடியதாயிருக்கும். அப்படி யில்லாவிட்டால் தொழிலாளர்களில் ஒரு பெரும்பகுதியினர் இந்தச் சட்டத்திற்கு எதிராக போய்விடுவார்கள். குறிப்பாக நெல்லை மாவட்டத்தை எடுத்துக் கொண்டால், "வெட்டிங் ஆப் தி லீவ்ஸ்", சுற்றுவது, லேபல் ஒட்டுவது எல்லாம் பெண்கனாலேயே செய்யப்பட்டு வருகிறது. அவர்கள் வீட்டில் இருந்துகொண்டே இந்த வேலையையும் கவனிக்கிறார்கள். அடுப்பில் அரிசியைப் போட்டுவிட்டு இதைக் கவனிக்கிறார்கள். முற்றத்தின் நிலாவெளியில் இருந்துகொண்டு இந்த வேலையைக் கவனிக்கிறார்கள். இச்சட்டம் வருவதால் அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு கிடைத்துக் கொண்டு இருந்த நாலணா, எட்டணா கூலி கூட கிடைக்காமல் போய்விடும். குறைந்த பட்சம் இவ்வளவு கூலி கிடைக்கும், ஒரு ரூபாய், ஒன்றரை ரூபாய் கூலி கிடைக்கும், அதனால் எப்படியும் வாழ்க்கை நடத்த முடியும், வாழ்க்கை நடத்தலாம் என்ற நம்பிக்கை அவர்களுக்கு வருமேயானால் இதை ஒரு முழு நேர வேலையாக எடுத்துக்கொள்ள அவர்கள் முன் வருவார்கள். ஆகவே, குறைந்த பட்ச கூலியை எவ்வளவு துரிதமாக அமுலுக்குக் கொண்டுவர முடியுமோ அவ்வளவு துரிதமாக அமுலுக்குக் கொண்டு வர சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களை வேண்டிக் கொள்கிறேன். இந்தச் சட்டம் இந்த முறையில் கொண்டு வரப்பட்டு, கூடிய சீக்கிரம் அமுலுக்குக் கொண்டு வரப்படும்போது அதற்குப் பல திருத்தங்கள் கொண்டு வர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். நான் ஏற்கெனவே குறிப்பிட்டபடி இந்தச் சட்டம் அவசியம் ஒரு நீதி மன்றத்தைப் பார்க்கத்தான் போகிறது. இதை அமுலுக்குக் கொண்டு வந்த ஒரு வருடத்திற்குள்ளாகவே இது நீதி மன்றத்திற்குச் சென்று விவாதிக்கப்படும் ஒரு சந்தர்ப்பம் கண்டிப்பாக வரும். அப்படி ஒரு நிலை வரும்போது நீதி மன்றம் ஓரளவு இந்தச் சட்டசபையின் கருத்து என்ன, நோக்கம் என்ன என்பதை அடிப்படையாகக் கொண்டுதான் நீதி வழங்குவார்கள் என்று நம்புகிறேன். ஆகவே, வேண்டிய திருத்தங்களைக் கொண்டு வந்து இதை நல்ல முறையில் அமைக்க வேண்டும். நாம் நிறைவேற்றும் இந்தச் சட்டம் நல்ல முறையில் கொஞ்சம் கொஞ்சமாக அமுலுக்குக் கொண்டு வர வேண்டிய நடைமுறையைக் கையாள்வார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டு இதை நல்லமுறையில் கொண்டு வந்த அமைச்சர் அவர்களை பாராட்டிக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI M. R. KANDASWAMI MUDALIYAR**: *கனம் சபாநாயகர் அவர்களே நமது அமைச்சர் அவர்களால் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றப்பட விருக்கும் இச்சட்டத்தை நாம் மிகவும் பாராட்டுகிறோம். சட்டம் உருவாகி விட்டது. அதை அமுல் நடத்தி அதன் பயனை தொழிலாளர்கள் நல்ல முறையில் பயன் பெற்று, நம் அரசாங்கத்தின் கீழ் தொழில் அபிவிருத்தி யடைவதோடு, தொழிலாளர்கள் க்ஷேமமாக வாழவேண்டுமென்ற எண்ணத்தோடுதான் இச்சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்ற விஷயத்தை*

நானும் சொல்லிக் கொள்கிறேன். அதோடு கூட, நாம் இதில் கட்சி பாகுபாடுகளை வைத்துக் கொண்டு, தொழிலாளர் நலனைப் பாதிக்கக்கூடிய அளவிற்கு, கட்சி வளர்ச்சிக்காக மட்டும் பயன்படுத்திக் கொள்ளாது, தொழிலாளி முதலாளி உறவு சுமுகமாக இருக்கும்போதே அதைக் கெடுத்துவிட்டு தமது கட்சியை வளர்த்துக் கொள்ளவேண்டுமென்ற நோக்கத்தோடு கட்சிகள் இதில் முனையக் கூடாதென்று நான் எல்லாக் கட்சியினரையும் கேட்டுக் கொள்ளுகிறேன். இதில் தொழிலாளர் நலன் முக்கியமானதேயொழிய கட்சிப் பிரச்னை முக்கியமானதல்ல. தொழிலாளர்கள் வாழ்க்கையில் வளம்பெறவே இச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. தவிர கட்சியின் வளர்ச்சிக்காக அல்ல இது கொண்டுவரப்பட்டிருப்பது. தொழிலாளர்கள், முதலாளிகள் இடையே சுமுகமான ஒரு உறவு நிலையிருந்தாலுங்கூட அதைக் கெடுத்து விட்டு தங்களது கட்சிகளை வளர்த்துக் கொள்ளக்கூடிய சில அரசியல் கட்சிகள் இருக்கின்றன. அந்த முறையை அறவே நீக்க வேண்டும். நாம் நம் நாட்டிலுள்ள தொழிலாளர்களின் நலனில் நோக்கம் செலுத்தவேண்டுமே தவிர பலப் பரீட்சை செய்ய வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். ஒரு நண்பர் சொன்னார், போலீஸ் தலையிடாமல் இருந்தால் சட்டத்திற்கே தேவையில்லை என்று. சட்டவரையறைக்கு உட்பட்ட காரியங்களைக்கூட போலீஸ் தலையிடாமல் நடத்த முடியாமல் இருக்கும்போது, காரியங்களை போலீஸ் இல்லாமலேயே நடத்த வேண்டுமென்று சொல்வது பலத்தை உபயோகப் படுத்தி, மிரட்டி தங்கள் காரியங்களைச் சாதித்துக் கொள்வது போலாகும். அது சரியல்ல. அது ஜனநாயக பண்பாட்டிற்கே விரோதமானது. அது, ஜனநாயகத்திற்கு உகந்ததாகாது. சட்டத்தையும், ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்டும் முறையில் எல்லாக் கட்சியினரும் தொழிலாளர் நலனில் அக்கரை கொள்ள வேண்டும். முதலாளி தொழிலாளிகளுக்கிடையே ஏதாவது சிற்சில தகருறுகள் ஏற்படுவதாகயிருந்தாலும் சரி, அவர்களிடையேயுள்ள உறவு சீர்கெடாத முறையில் அத்தகருறுகளைத் தீர்த்து வைக்க எல்லாக் கட்சிகளும் முனையவேண்டுமென்று கேட்டுக் கொண்டு ஒரு விஷயத்தை மாத்திரம் கூறிக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் இந்த மசோதாவைக் கொண்டு வரும்போது, அவர் சார்ந்திருக்கும் கட்சி அதை ஏற்றுக் கொள்ளாதிருக்குமானால், அக்கட்சியைச் சார்ந்தவர்களின் ஒத்துழைப்பு இல்லையென்றால் அமைச்சர் கூட இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்க முடியாது. அமைச்சர் அவர்கள் சார்ந்திருக்கிற கட்சிக்கும் இந்த மசோதாவைக் கொண்டு வர வேண்டுமென்ற நோக்கம் இருப்பதினால்தான் இம்மசோதா இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆளும் கட்சி அங்கத்தினர்களுக்கு இந்த மசோதாவைக் கொண்டு வர விருப்பமில்லாதது போலும் அமைச்சர் அவர்கள்தான் இதைக்கொண்டுவந்திருக்கிறார்கள் என்று எதிர்க்கட்சியினர் சொல்வதைக் கேட்டு விட்டு காங்கிரஸ் கட்சியினர் இதை எதிர்த்து பேசி இந்த மசோதாவை வரவிடாமல் செய்து விட்டால், நாம் அதன் மேல் ஒரு கிளர்ச்சி செய்யலாமே என்று எதிர்க்கட்சியினர் நினைக்கின்றனர். இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்ததற்காக நான் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். தொழில் அமைச்சர் அவர்கள் நல்லதொரு சட்டத்தைக் கொண்டு வந்து, நமது அமைச்சர் அவர்கள் கொண்டு வந்த ஒரு சட்டத்தையாவது சின்னதுரை போன்றவர்கள் பரிபூர்ணமாக ஒத்துக் கொண்டதைப் பாராட்டுகிறேன். அமைச்சர் அவர்கள் இச்சட்டத்தை நல்ல முறையில் அமுல் நடத்த வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் எடுப்பார்கள், எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI K. ANBAZHAGAN :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, பீடித் தொழிலாளர் நலப் பாதுகாப்புச் சட்டத்தை அமைச்சர் அவர்கள் தக்க முறையில் கொண்டு வந்து நல்ல நோக்கோடு நிறைவேற்றியிருப்பதை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் வரவேற்று நான் பாராட்டுகிறேன். இந்தச் சட்டம் ஏறத்தாழ கடந்த ஆறு, ஏழு மாத காலமாகவே கொண்டு வந்து நிறைவேற்றுவதற்கு முயற்சி நடைபெற்று வந்துள்ளது. இடையில்

பல திருத்தங்கள் தேவைப்பட்ட காரணத்தினாலோ, பல்வேறு கருத்துக்கள்
புதிதாகச் சேர்க்கப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டதின் காரணத்தினாலோ
அவைகளையெல்லாம் பரிசீலிப்பதற்கு இவ்வளவு காலம் செலவழிக்கப்பட
வேண்டிய நிலைமை ஏற்பட்டாலும் நல்லதொரு பரிசிலனை நடைபெற்றிருக்
கிறது என்றுதான் நான் கருதுகிறேன். இப்பொழுதுங்கூட, அமைச்சர்
அவர்கள் பல்வேறு வகையான கருத்துக்களைச் சீர்தூக்கிப் பார்த்து நல்ல
தொரு முடிவிற்கு வந்திருக்கிறார்கள் என்று நான் குறிப்பிட விரும்பு
கிறேன். மாற்றுக் கட்சியைச் சார்ந்திருக்கும் நண்பர்கள் சிலர் சில
நேரத்தில் தவறான திருத்தங்களைத் தந்தபோதிலும், ஒவ்வொருவருக்கும்
150 கன அடி இடம் தொழிலாளர்கள் வேலை செய்யும் இடங்களில்
இருக்க வேண்டுமென்று மசோதாவில் இருந்தபோதிலும், 100 கன அடி
இடம் வேண்டுமென்று திருத்தம் தரப்பட்டபோது அந்த 50 கன அடியை
லாபமாக அமைச்சர் அவர்கள் எடுத்துக் கொள்ளாதது பாராட்டத் தக்க
தாகும். பொதுவாக, சட்டங்கள் வரும்போது பக்கத்திலுள்ள மாகாணங்
களைச் குறிப்பிடுவது என்பது அவ்வளவு முக்கியமல்ல என்றாலும் பக்கத்தி
லுள்ள மாகாணங்களைக் குறிப்பிட்டுப் பேசும்போது அதன் சிறப்புக்களைப்
பற்றி மட்டும் கூறாமல் அங்குள்ள நிலையைப்பற்றி வெட்டிப் பேசியோ,
ஒட்டிப்பேசியோதான் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ள நேருகின்றது.
திருவாங்கூர்—கொச்சி அரசில், குறைந்த பட்சக் கூலி நிர்ணயிக்கப்பட்
டிருக்கிறது என்பதற்காகப் பாராட்டினாலும், பீடித் தொழில் விளைவுகள்
பற்றிய இப்படிப்பட்டதொரு சட்டம் அங்கு இல்லை என்றே நான் கேள்விப்
படுகிறேன். அது எப்படி இருந்தபோதிலும், நமது அரசில் கூலி நிர்ணயம்
இல்லாமல் இந்த மசோதா அதன் முழுப் பலனையும் தர இயலாது.
எனவே இந்தச் சட்டத்தை நிறைவேற்றுகின்ற நேரத்தில் தொழிலாளர்
களின் கூலியையும் நிர்ணயம் செய்யவேண்டியது அரசாங்கத்தின் கடமை
என்ற முறையில் பல அங்கத்தினர்கள் வற்புறுத்தியதுபோன்று பீடித்
1-00 p.m. தொழிலாளர்களுக்குக் கூடிய சீக்கிரத்திலேயே கூலியை நிர்ணயிக்க
வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்து, இதற்கு முன்னால்
பேசப்பட்ட சில கருத்துக்களை வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். பீடித்
தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற பெண்களுக்கு எந்தக் காரணத்தை முன்
னிட்டும் வேலையற்ற நிலைமை ஏற்பட விடக்கூடாது. அவர்களுக்குப் பாது
காப்பு அளிக்கப்பட வேண்டும். நிர்வாக முறையில், ஒரு சட்டத்தை நிறை
வேற்றுகின்ற வேளை இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற பெண்களை
வேலையின்றிக் கைவிட்டு விட நேரிடலாம். ஆகவே இவ்வித துன்பங்கள்
எதுவும் ஏற்படாதவாறு அவர்களுக்குக் கிடைத்து வருகின்ற சிறு ஊதியம்
தொடர்ந்து கிடைப்பதற்குத் தகுந்த வகையில் அவர்களுக்குப் பாதுகாப்பு
அளிக்கவேண்டும் என்று சர்க்காரை நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்
வேன். பொதுவாக சட்டங்களை நிறைவேற்றி நடைமுறையில் கொண்டு
வருகின்ற நேரத்தில், சில முதலாளிகள், இப்படிப்பட்ட சட்டங்களை நிறை
வேற்றுகின்ற அதிகாரிகளுடைய கவனக்குறைவினாலும், அவர்களின் சுய
நலத்தின் காரணமாகவும், இப்படிப்பட்ட சட்டங்களிலிருந்து தப்பித்துக்
கொள்கின்றனர். எனவே இந்தத் துறையில் செயலாற்றுகின்ற அதிகாரி
கள் மிகவும் பொறுப்புள்ளவர்களாகவும் மிகுந்த கவனமுள்ளவர்களாக
வும் செயலாற்றவேண்டும். முன்னால் இருந்து வருகின்ற "ஷாப் அஸிஸ்
டண்ட் ஆக்ட்" காரணமாக இன்றையதினம் பல இடங்களில் இருக்கின்ற
விற்பனை நிலையங்களிலுள்ள தொழிலாளர்கள் நல்ல முறையில் பாது
காக்கப்படவில்லை என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகிறது. அவ்வித
மான குறைகள் இதில் ஏற்படாமல் தொழில் அமைச்சர் அவர்கள் கவ
னித்துக்கொள்வார்கள் என நம்புகிறேன். கடைசியாக நான் ஒன்று
கேட்டுக்கொள்வேன். இந்த சட்டம் காரணமாக எதாவது நீதி விவாதம்
ஏற்படுமானால் நீதி மன்றத்தில் இந்த சர்க்கார் தொழிலாளர்கள்
சார்பாக நின்று அவர்களுக்காக வாதாட வேண்டும். இன்று வேஜஸ்
ஆக்ட்-டின் காரணமாக நீதி மன்றங்களில் இருக்கின்ற வழக்குகளில்
எல்லாம் இந்த சர்க்கார் தொழிலாளர்கள் பக்கம் இருக்க வேண்டும்
என்று கேட்டுக்கொள்கிறேன். எனக்கு முன்னால் பேசிய, ஆளும் கட்சி
யைச் சேர்ந்த அங்கத்தினர்கள் சிலர், இம்மாதிரி சட்டங்கள் கொண்டு

13th September 1958] Sri K. Anbazhagan]

வரப்படுகின்ற இச்சமயத்தில் மாற்றுக் கட்சிகள் சில வீணைப் போராட்டங்களை நடத்திக் கொண்டிருக்கின்றன என்று குறைப்பட்டு கொண்டார்கள். திராவிட முன்னேற்ற கழகத்தைப் பொறுத்தவரையில் நான் சொல்லுவேன், இப்படிப்பட்ட நல்லதொரு சட்டம் வருகின்ற நேரத்தில் எத்தகைய போராட்டங்களிலேயும் திராவிட முன்னேற்றக் கழகம் ஈடுபடாது. போராட்டங்கள் ஒன்றும் இல்லாமலேயே இச்சட்டம் நிறைவேரவேண்டும் என்றுதான் திராவிட முன்னேற்றக் கழகம் விரும்புகின்றது, இப்படிப்பட்ட நேரத்தில் பேரராட்டத்தில் ஈடுபடமாட்டோம், தேவையான நேரத்தில்தான் போராட்டத்தில் ஈடுபடுவோம் என்பதையும் தெரிவித்துக்கொண்டு. இத்தகைய நல்லதொரு சட்டத்தை நிறைவேற்றுவதற்கு திராவிட முன்னேற்ற கழகம் தனது ஒத்துழைப்பைத் தரும் என்பதை தெரிவித்துக்கொண்டு, இந்த சட்டத்தைக் கொண்டு வந்த அமைச்சர் அவர்களுக்கு பாராட்டுதல்களையும் தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri V. K. KOTHANDARAMAN :** தலைவர் அவர்களே, இன்றைய தினம் பீடித் தொழிலாளர்களுக்கு என்று வகுக்கப்பட்டிருக்கிற சட்டத்தைப் பார்த்து நாம் அதை வரவேற்க வேண்டியதுதான். அதோடு இதைக் கொண்டு வந்த கனம் அமைச்சர் வெங்கட்ராமன் அவர்களையும் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் பாராட்ட வேண்டியது என்று சொன்னால் முதல் முதலாக இந்த மாதிரி ஒரு சட்டம் கொண்டு வருவதற்குக் காரணமாயிருந்தது, தூண்டுகோலாக இருந்தது, தொழிலாளிவர்க்கத்தினுடைய, அதிலும் குறிப்பாகப் பீடித்தொழிலாளர்களுடைய போராட்டம் தான். அவர்கள் பல ஆண்டுகள் காலமாகப் போராடிப் போராடி நூற்றுக்கணக்கான அடி, உதை இவைகள் எல்லாம் பட்டு, ஜெயிலுக்குப்போய் கஷ்டம் அனுபவித்தார்கள். அதிலும் குறிப்பாக 1956-வது ஆண்டில் 500-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள், தொழிலாளர் பிரதிநிதிகள் இவர்கள் எல்லாம் கைது செய்யப்பட்ட பிறகுதான், இந்தச் சர்க்கார் " இதோ கொண்டு வந்துவிட்டோம், அடுத்த ஆண்டிலேயே கொண்டு வருகிறோம் " என்றெல்லாம் சொல்லி இப்போது 1958-வது ஆண்டிலாவது இந்த மசோதா நிறைவேற்றக்கூடிய அளவுக்கு வந்தது. இதை எப்படியாவது நிறைவேற்றியாக வேண்டும் என்று இன்று தொழில் அமைச்சராக இருக்கக் கூடிய திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் பாடுபட்டு வந்தார். அதற்காக அவர்களை நான் பாராட்டுகின்றேன். அடுத்ததாக இதுபோன்ற இன்னும் சில காரியங்களைச் செய்யவேண்டிய சர்க்கார் இன்னும் காலதாமதம் செய்து கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாக இன்று பல முதலாளிகள் அதிகாரமாக இருந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே இன்னும் இது போன்ற பல சட்டங்களை உடனடியாக நிறைவேற்றவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு இம்மாதிரிப்பட்ட குறைந்த பட்ச சட்டங்களாவது இன்றைய தினம் நிறைவேற்றப்படுகின்றது என்று சொன்னால், அதற்கு எல்லாம் காரணமாயிருந்த தொழிலாளி வர்க்கத்தை நாம் பாராட்ட வேண்டும். இன்று இந்த மசோதா நிறைவேறியபோதிலும் கூட, இந்த சட்டம் உடனடியாக அமுல் நடத்தப்படவேண்டும். இன்றைய தினம் சேலம் ஜில்லா, திருச்சிராப்பள்ளி ஜில்லா போன்ற இடங்களில் பத்தாயிரத்திக்கு மேற்பட்ட பீடித் தொழிலாளர்கள் போராட்டத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னால், இம்மாதிரிப்பட்ட சட்டங்கள் நிறைவேறுகிற இந்த நேரத்தில் இவர்கள் வேண்டுமென்றே போராட்டத்தை நடத்துகிறார்கள், கட்சி மனோபாவத்துடனேயே இந்த போராட்டத்தை நடத்துகிறார்கள் என்று மட்டும் சொல்லிவிட்டால் போதாது. இன்றைய தினம் அவர்கள் எதற்காக போராடுகிறார்கள் என்பதை எல்லாம் தெரிந்துகொள்வதற்குப் பதிலாக ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் வேண்டுமென்றே மொட்டையாக எதையாவது நினைத்துக்கொண்டிருப்பது மிக மிகத் தவறு என்பதையும் ரொம்பவும் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இம்மசோதாவிலுள்ள ஒவ்வொரு ஷரத்துக்களையும் சர்க்கார் நினைக்கின்ற சமயத்தில் கொண்டு வரலாம் என்று சர்க்கார் எண்ணினாலும் கூட இந்தச் சட்டத்தினால் தொழிலாளர்கள் சரியான விதத்தில் பாது

காக்கப்பட வேண்டும். இதன் மூலம் அவர்கள் பாதுகாக்கப்பட்டமாட்டார்கள் என்று நான் சொல்ல வரவில்லை. இருந்தாலும் தொழிலாளர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருவதற்கு உடனடியாக என்னென்ன விதிகள் எல்லாம் கொண்டுவரவேண்டுமோ அந்த விதிகளை எல்லாம் தயவு செய்து உடனடியாகக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இவைகளை உடனடியாக அமைச்சர் அவர்கள் கொண்டுவருவார்கள் என்றும் நம்புகிறேன். இந்தச் சட்டம் மாத்திரம் இருந்துவிட்டால் தொழிலாளர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிடாது. இதோடு குறைந்தபட்ச கூலி நிர்ணய சட்டமும் கொண்டு வரவேண்டும். இதை முதலாவது கொண்டு வந்து அதைப் பின்னால் கொண்டு வந்தாலும் சரி, அல்லது கூலி நிர்ணயச் சட்டத்தை முதலாவது கொண்டு வந்துவிட்டுப் பின்னால் இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்தாலும் சரி, இரண்டுமே குழப்பத்தைத்தான் ஏற்படுத்தும். ஆகவே இரண்டையும் ஏக காலத்தில் கொண்டு வந்து நடை முறையில் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அது மாத்திரமல்ல. தென்னிந்தியாவில் மூன்று, நான்கு ராஜ்யங்களில் இந்தத் தொழில்கள் இருந்து வருகிறது. இத்தகைய ஒரு சந்தர்ப்பத்தில் இந்த ராஜ்யத்தில் இருப்பதை விடக் கூடுதலாக இருந்தாலும் சரி, குறைவாக இருந்தாலும் சரி, இதுபோன்ற ராஜ்யங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து விவாதம் செய்து ஒரே மாதிரியான சட்டம் கொண்டு வந்து விவாதிக்கப் போகிறார்கள் என்று பத்திரிகையில் செய்தி வெளிவந்திருந்தது. அம்மாதிரிக் கொண்டு வருவது நலமாக இருக்கும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்தச் சட்டம்...

**Mr. SPEAKER** : கனம் அங்கத்தினர் அவர்கள் சீக்கிரமாக பேச்சை முடித்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இனி மேல் அமைச்சர் அவர்கள் பேச வேண்டியிருக்கிறது.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஆகவே இந்தச் சட்டம் அமுலுக்கு வரக்கூடிய நேரத்தில் நாங்கள் எல்லாம் தொழிற்சாலைகளை ஆரம்பித்துவிட்டோம், தொழிலாளர்கள் தான் வரவில்லை என்று சொல்லக் கூடிய அளவுக்குப் பல கிராமங்களில் இருக்கக்கூடிய பிராஞ்சுகளை எல்லாம் மூடிவிட்டு வேலை கொடுக்காமல் இருந்து விடுவார்கள். ஆகவே இந்தச் சட்டத்தை நடைமுறையில் கொண்டு வருகின்ற நேரத்தில் மிகுந்த கவனத்தோடு இவற்றைக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு மத்திய சர்க்கார் ட்ரேட் மார்க் விஷயத்தில் ட்ரேட் மார்க் இருக்கிறவர்களுக்கே லைசென்ஸ் கொடுக்கவேண்டும் என்று மத்திய சர்க்காரை நாம் வற்புறுத்த வேண்டும். அதே போன்று எல். 2 போன்ற லைசன்ஸ் கொடுக்கின்ற விஷயத்திலும் மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்கார்களோடு கலந்து கொண்டு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று மத்திய சர்க்காரை இந்தச் சர்க்கார் வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு தொழிலாளர்களின் பாதுகாப்புக்காக கொண்டு வரப்பட்டிருக்கிற இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்த தொழில் அமைச்சர் கனம் வெங்கட்ராமன் அவர்களுக்குத் தொழிலாளி வர்க்கத்தின் சார்பாகவும் என் சார்பாகவும் நன்றியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

1-10 p.m. **THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைக்கு, எந்த விதமான கட்சிப் பாகுபாடு மின்றி, நல்ல முறையில், ஒரு சட்டம் இயற்றவேண்டுமென்று ஒத்துழைத்த எல்லா அங்கத்தினர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீண்ட காலமாக, பீடித் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்களுக்கு சட்டப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டுமென்ற நோக்கம் நம் நாட்டில் பரவி வந்திருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்னால் மத்திய சர்க்கார் இது சம்பந்தமாக பாக்டரி சட்டத்தை அமுல் நடத்த முடியுமா என்றெல்லாம் விசாரணை செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். அதையொட்டித்தான் நாம் நடராஜன் அவர்களை இதைப் பரிசீலனை செய்வதற்காக நியமித்தோம்.

நேற்று விவாதத்தில் மத்திய சர்க்காரிடத்தில் ஒரு சட்டம் கொண்டு வரும் அபிப்பிராயம் இருக்கிறது என்று சொன்னேன். அது தவறு. இப் போது எந்த விதமான அபிப்பிராயமும் இல்லை என்று அறிந்து கொண் டிருக்கிறேன். ஆகவே, மத்திய சர்க்கார் ஏதோ கொண்டு வருவார்கள் என்று சொன்னதை சற்று மறந்துவிடவேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன்.

இந்தத் தொழிலானது பண்டைக் காலத்திலிருந்து ஒரு குடிசைத் தொழி லாக வளர்ந்து வந்திருக்கிறது. குடிசைத் தொழிலானது நம் நாட்டி லுள்ள மக்களுக்கு தங்களுடைய வருவாயை பெருக்கிக் கொள்ள உப யோகமாக இருக்கிறது. ஆகவே குடிசைத் தொழில்களை நாம் அதிகரிக்க வேண்டுமென்ற நோக்கம், விஸ்தரிக்க வேண்டுமென்ற நோக்கம் சர்க்கார் மனக் கருத்தில் இருக்கிறது. ஆனால், குடிசைத் தொழில்களை விஸ்தரிக்க வேண்டுமென்று நினைக்கும்போது, அவர்களுக்கு அந்தக் குடிசைத் தொழில் மூலமாக உடல் சீர்கெடுமானால், அவர்களுடைய தேக ஆரோக்கி யம் பாதிக்கப்படுமானால், அவர்களுடைய வாழ்க்கை பாதிக்கப்படுமானால், குடிசைத் தொழில் என்ற காரணத்திற்காக மட்டும் நாம் அதை வரை யறுக்காமல், கட்டுப்படுத்தாமல் விட்டுவிட முடியாது. இன்றைக்கு இவ்வாறு கட்டுப்பாடுகள் செய்ய முன் வந்திருக்கும்போது, நாம் இந்தத் தொழிலை பீடி இண்டஸ்ட்ரியல் பிரெமிஸெஸில் தான் செய்யவேண்டுமென்று கட்டுப் பாடு கொண்டு வந்திருக்கிறோம். இதிலே எவ்வளவோ கஷ்டங்கள் இருக் கின்றன. திடீரென்று ஒரு முறையில் செய்து கொண்டிருந்தவர்களை, வேறு ஒரு முறையில் மாற்றிச் செய்யவேண்டுமென்று சொன்னால் அதிலே எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. இதனால் செலவுகள் இருக்கும். அந்த மாறுதல்களினால் நஷ்டம் வந்துவிடுமோ என்ற பயம் இருக்கிறது. சில முதலாளிகள் மனதிலே. ஆகையால் தான் ராஜ்ய சர்க்கார், இந்த மசோதாவை உடனடியாக அமுல் நடத் தாமல், படிப்படியாக அமுல் நடத்துவதற்காக வேண்டிய அதி காரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறது. ஒரே சமயத்தில் இந்த மசோதா பூராவையும் அமுல் நடத்தாமல், இந்தக் கஷ்டங்களையெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு எந்தெந்த ஷரத்துக்களை எவ்வப்போது கொண்டுவர வேண்டுமென்று யோசித்து அமுல் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறது. இதில் ஏதோ சர்க்கார் தயக்கம் கொண்டிருக்கிறார்கள் என்று எண்ண வேண்டாம். நல்ல முறையில் நடத்தவேண்டுமென்றுதான் செய்திருக் கிறோம்.

பெண்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்பதற்காக இலைகளை வெட்டுவது, நனைப்பது போன்ற வேலைகள் இவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக் கிறது. இவ்வாறு ஒதுக்கப்படுவதால் பெண்கள் பாதிக்கப்படுவார்களானால் மறுபடியும் சர்க்கார் பரிசீலனை செய்யும். அதனால் நம் நாட்டில் பிழைப் புக்கு வேண்டிய வேலையில்லாமல் இருக்கும் பெண்களுக்குக் கஷ்டம் ஏற்படுமானால் கவனித்து வேண்டிய விதி விலக்குக் கொடுக்க வேண்டியது அவசியம். அதற்காகத்தான் விதி விலக்குக் கொடுக்கும் அதிகாரத்தை சர்க்கார் வைத்துக் கொண்டிருக்கிறது.

தொழிலாளிகளும், முதலாளிகளும் சேர்ந்து, மனப்பூர்வமாக ஒத் துழைத்தால் தொழிலுக்கும் மேன்மை கிடைக்கும், தொழிலாளர்களுக் கும் நன்மை கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை. சுகாதார வசதியுள்ள இடத்தில் தொழிலாளிகளுக்கு பீடி சுருட்டும் வசதி கொடுத்தால், சாதா ரணமாக ஒரு தொழிலாளி நாள் ஒன்றுக்கு 1,000 பீடி சுருட்டும் நிலையில் இருப்பானானால், இப்போது 1,200, 1,500 பீடிகள் சுருட்ட முடியும். சீர்கேடான நிலைமையில் சுருட்ட வேண்டியிருந்தால் இந்த 1,000 பீடி கூட சுருட்ட முடியாது. நல்லபடி, சட்டப்படி காரியங்களைச் செய்யவேண்டு மென்று நினைக்கும்போது, அதனால் தொழிலுக்கு அபாயம் வந்து விடு மென்ற மனப்பான்மையை விடவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். சட்டத்திலுள்ள ஷரத்துக்களை தொழிலாளர்களும், முத லாளிகளும் நன்குணர்ந்து ஒத்துழைத்தால் சட்டம் நல்ல பலன் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

சர்க்காரைப் பொறுத்த அளவில், தொழிலாளர் நலன் பாதிக்கப்படுமானால், அல்லது முதலாளிகளின் நலன் பாதிக்கப்படுமானால், இந்தத் தொழில் க்ஷீணித்து விடும், அதைத் தவிர்த்து இந்தத் தொழில் வளர்ச்சியடைய வேண்டுமென்று நடு நிலையாக இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம். அந்த எண்ணம் நிறைவேறும் என்று நம்புகிறேன். அதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த மசோதாவை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958, as amended (L.A. Bill No. 18 of 1958) be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.

### II.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER—*cont.*

### (2) HOURS OF SITTING ON 17TH SEPTEMBER 1958.

MR. SPEAKER : Before I come to the next item, I have an announcement to make to the House. After the half-hour debate, this House will adjourn and meet again on the 17th. As many hon. Members have told me that they would like the House to meet at 11 a.m. on that day as they have to return from their respective places, under the powers vested in me, I have decided that the House will sit from 11 a.m. to 5 p.m. on that day only. On the next day the House will meet at 9 a.m.

### VIII.—HALF-HOUR DEBATE *RE* LEASE OF MAGNESITE DEPOSITS IN SALEM.

MR. SPEAKER : The next item is, half-hour debate on Magnesite. May I know whether the Hon. Minister will take 10 minutes or even more?

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I would require about 15 minutes and I would not mind even if the debate takes 30 or 35 minutes.

* SRI K. VINAYAKAM : Sir, according to the rules, at the end of the 30th minute, the Hon. Speaker will leave the House and no more discussion can be carried on. So we have to adjust among ourselves within 30 minutes and the Hon. Speaker has no right to continue the debate after the 30th minute.

SRI P. G. KARUTHIRUMAN : Sir, with the permission of the House, the House can sit longer.

MR. SPEAKER : In a way the hon. Member is right. The proviso to Rule 39 of the Assembly Rules says—

"Provided that on notice given to the Speaker at question-time, the Speaker may, in his discretion, allow half an hour after